


சென்னை பிரம்மசமாஜத்தை சேர்ந்த பெண்மணிகள்:—இந்த சமாஜத்தின் ஆண்டு விழாவின்போது முதன் மந்திரி டாக்டர் சுப்பராயன் அவர்களுடைய மனைவியாரின் தலைமையின் கீழ் ஒரு கூட்டம் நடத்தினார்கள்.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 15 } சுக்கில௵ மாசிமீ ௧௨ { பகுதி 8
1930௵ பிப்ரவரிமீ 12உ

## கடவுள் வணக்கம்.

வாசா கயிங்கரியம் அன்றியொரு சாதனம்
மனோவாயு நிற்கும் வண்ணம்
வாலாய மாகவும் பழகியறியேன் துறவு
மார்க்கத்தின் இச்சை போல
நேசானு சாரியாய் விவகரிப்பே னந்த
நினைவையு மறந்தபோது
நித்திரைகொள் வேன்றேக நீங்குமென எண்ணிலோ
நெஞ்சந் துடித்தயருவேன்
பேசாத ஆனந்த நிட்டைக்கும் அறிவிலாப்
பேதைக்கும் வெகு தூரமே
பேய்க்குணம் அறிந்திருந்த நாய்க்குமொரு வழி பெரிய
பேரின்ப நிட்டை யருள்வாய்
பாசாட விக்குளே செல்லாதவர்க்கருள்
பழுத் தொழுகு தேவதருவே
பார்க்குமிடம் எங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணா னந்தமே. (1)

---

வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்கு பரம்பொருளே நின் விளையாட்டல்லால்
மாறுபடுங் கருத்தில்லை முடிவின் மோன
வாரிதியில் நதித்திரள் போல் வயங்கிற்றம்மா! (2)

---

படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றற்றுச் சிந்தைத்
துடிப்பற்றார்க் கன்றோ சுகங்காண் பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

(1) இதனால் அடிகள் பேய்க்குணத்தை நீக்கிப் பேரின்ப நிட்டை அருளுமாறு வேண்டுகின்றார்.

(இ-ள்.) ஆசைப் பெருங்காட்டில் நுழையாதவர்களுக்கு அருள் பழுத்து ஒழுகும் கற்பகத் தருவே! நோக்கும் இடமெல்லாம் ஒரு சிறிதும் நீங்காமல் நிறைந்து விளங்குகின்ற முழு இன்பமய இறைவனே! ஒரு விண்ணப்பம். என்னுடைய கைங்கரியம் எல்லாம் வாசா கைங்கரியம். காரியத்தில் ஒன்றும் இல்லை. மனமும் வாயுவும் அடங்கி நிற்கும் வகை முறையாக—சிறிது சிறிதாக வாயினும் பயின்று அறியேன். ஆனால் துற வறத்தின் சிறப்பைக் குறித்து—அதில் எனக்கு ஆழ்ந்த பற்றுள்ளம் இருப் பதுபோல் மற்றவர்கள் மதிக்கும்படி வெகு தாராளமாய் வாதாடுவேன். அந்த எண்ணம் மறந்த சமயத்தில் நன்றாக உறங்குவேன். ஏதேனும் இடை யூறு நேர்ந்து உடல் நீங்கிவிடும் என்ற உணர்ச்சி ஏற்பட்டாலோ மனம் துடிதுடித்துச் சோர்வு அடைவேன். ஆதலால் சொல்லுக் கடங்காத இன்ப நிட்டைக்கும் ஞான சூனியப் பேதையாகிய எனக்கும் வெகுதூரம். நானாக ஒன்றும் செய்ய என்னால் இயலாது. நாயேனுடைய பேய்க் குணத்தை அறிந்து ஒப்பற்ற செந்நெறியாகிய பேரின்ப நிட்டை கைகூடும் வண்ணம் நீயே அருள் புரிவாயாக என்பதாம்.

வாசா கைங்கரியம்—சொல் அளவிற் சேவை. கைங்கரியங்களில் வாசிகம், மானசிகம், காயிகம் என மூன்று வகை உண்டு. ஒருவர் இந்த மூன்று நெறியாலும் சேவை செய்யலாம். ஆனால் இந்த இடத்தில வாசா கைங்கரியம் என்பது காரியத்தில் ஒன்றும் இல்லாமல் வெறும் வாய் வேதாந்தம் பேசுவதைக் குறித்து நிற்கின்றது. வாலாயம்—பழக்கம். நிட்டை—மன ஒடுக்கம். பேய்க்குணம்—அங்கும் இங்கும் அலைந்துகொண் டிருக்கிற குணம். பாசாடவி—ஆசையாகிய பெருங் கானகம்.

(2) இதனால் எல்லாச் சமயங்களிலும் அடிப்படையான கருத்து ஒன்றே என்பதைக் கூறுகின்றார்.

(இ-ள்.) எங்கும் நிறைந்து விளங்கும் படியான பரம்பொருளே! முரண்பட்ட பல வேறு மதங்களையும் ஆராய்ந்து பார்த்தால் நின் திருவிளை யாட்டைத் தவிர மாறுபட்ட கருத்தை ஒருசிறிதும் காணமுடியாது. பெருங் கடலில் நாலுதிசைகளிலும் இருந்து வந்து சங்கமமாகும் நதித்திரள் போன்றே பல சமயங்களும் இருக்கின்றன என்பதாம்.

(3) இதனால் எல்லாப் பற்றுக்களையும் துறந்தவர்க்கே இன்பம் சித் திக்கும் என்கின்றார்.




## பெண்களுக்குரிய நலன்கள்.

——(o)——

இல்லறம் என்பது ஆடவனோ பெண்ணோ தனித்து நின்று செய்யக்கூடிய காரியம் அல்ல. ஒத்த காதலனும் காதலியும் முரண்பாடின்றி ஒன்றுபட்ட நோக்கத்தோடு விதிப்படி ஒழுகுவதே நல்லறமாகிய இல்லற மாகும். இல்லற வாழ்க்கையில் பெண்மக்கட்குப் பொறுப்பு அதிகம். அநேகமாக பொருளீட்டல் ஒன்றே ஆடவர் கடமையாக இருக்கிறது. வீட்டை விளக்க முறச் செய்யவேண்டிய கடமை பெண்களுக் குரியது. பொருள் காரணமாக வெளி விவகாரங்களில் ஈடுபட்டு அல்லற்படும் ஆடவர்களுக்கு வாழ்க்கையில் சாந்தியையும் இன்பத்தையும் உண்டு பண்ணக்கூடியவர்கள் பெண்களே. குழந்தைகளை மாண்புடை மக்களாகச் செய்யவேண்டிய பொறுப்பு கணவரைக் காட்டிலும் மனைவிமாருக்கே அதிகம் என்று சொல்லவேண்டும். ஏனெனில் தாய்க்கும் குழந்தைக்குந்தான் நெருங்கிய சம்பந்தம் இருக்கிறது. குழந்தை மீது தாய்க்குத்தான் இயற்கையான அன்பு அரும்புகிறது. தந்தைக்கும் குழந்தைக்கும் உள்ள அன்பு தாயின் மூலம் ஏற்பட்ட செயற்கை அன்பு என்றே சொல்லவேண்டும். ஆதலால் பிள்ளைகளுக்குக் குழந்தைப் பருவத்தில் வளர்ச்சி பெறும் குணங்கள் பெரும்பாலும் தாய்மாரின் தன்மையையும் போக்கையும் தழுவியிருப்பது சகஜம். “தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்” என்ற பழமொழிக்கிணங்க ஒரு குழந்தைக்குப் பாலியத்தில் படிபடும் குணங்களே அதன் பிற்கால வாழ்விலும் உறைத்து நிற்கின்றபடியால் குழந்தைகளை வெகு ஜாக்கிரதையாகக் கவனித்து நல்வழிப் படுத்தி வளர்க்க வேண்டிய பொறுப்பு தாயைச்சார்ந் திருக்கிறது.

இங்ஙனம் கொழுநனைப் பேணுதல் குழந்தைகளை வளர்த்தல் ஆகிய பெரும் பொறுப்புள்ள இவ்விரண்டு காரியங்களோடு விருந்

தோம்பல் சுற்றந் தழுவல் முதலிய இல்லறத்துக்குச் சிறந்த காரியங்களைச் செய்யும் கடமையும் மனைவியையே சார்ந்து நிற்பதால் ஒரு மனைவியானவள் எத்தகைய அறிவு ஆற்றல்களோடு சிறந்து விளங்கவேண்டும் என்பதை நேயர்கள் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். வீட்டுக் குரிய எல்லாப் பொறுப்பும் பெண்டிரைச் சார்ந்திருந்தமையாலேயே அவர்கட்கு மனைவி, மனையாட்டி, இல்லாள், இலலக்கிழத்தி, மனைக்கிழத்தி என்ற வீட்டுச் சம்பந்தமுள்ள பெயர்கள் வழங்கப்படுகின்றன. இவ்விதம் வீட்டடியாக வழங்கப்படும் பெயர்கள் ஆடவர்கட்கு இல்லை என்பது எல்லாருக்குந் தெரிந்த விஷயம்.

மேற்கூறியபடி குடும்பப் பொறுப்பில்—இல்லறத்தில் சிறப்புரிமை பூண்ட பெண் மக்கட்கு நமது நாட்டில் கல்வி அறிவு கிடையாது, சுதந்தரங் கிடையாது. ஆடவர்கள் இட்டது சட்டம். 'புருஷன் பார்த்துச் சாப்பிடு என்றால் சாப்பிட வேண்டும், வேண்டாம் என்றால் சும்மா இருக்கவேண்டும். ஆடவர்களுக்குப் பெண்கள் அடிமைப்பட்டுக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும் என்ற உணர்ச்சி நமது நாடெங்கும் ஆழமாக வேரூன்றி யிருக்கிறது. உலகத்திலுள்ள மற்றைய நாடுகளிலும் இத்தகைய—ஆணுக்குப் பெண் அடிமை என்ற உணர்ச்சி வளர்ந்து, ஆணவம் மிக்க ஆடவர்களால் பெண்கள் பல கொடுந் துன்பங்களை அநுபவித்து வந்திருந்தாலும் தற்காலம் அவ்வந்நாடுகளில் பெண்கள்சுதந்தர இயக்கங்கள்தோன்றி தீவிரமான கிளர்ச்சி செய்து போராடி வருவதன் மூலம்அநேக நன்மைகள் உண்டாகி வருகின்றன நம்முடைய நாட்டில் பெண்களின் நிலைமை மிகவும் கேவலமானது; பெண்களுக்குக் கல்வியே தேவை இல்லை, அவர்கள் படிக்கக் கூடாது என்று சாஸ்திரங்களின் மூலம் கட்டுத் திட்டம் செய்திருக்கிற நாடு நமது நாட்டைத் தவிர வேறு ஒன்று இல்லை. பெண்கள் எல்லாரும் ராக்ஷஸ வருக்கத்தைச் சேர்ந்தவர்கள், பேய்கள், கூற்றிலுங் கொடியவர்கள், பாவிகள் என்றே எல்லாரும் இதுகாறும் கருதி வந்திருக்கின்றனர். இந்த மாதிரியான மனோபாவம் நாட்டில் நிறைந்திருக்கிறது என்பதற்கு எத்தனையோ உதாரணங்கள் கொடுக்கலாம். 'பெண்கள் சாகஸக்காரிகள்; ஆண்கள் கெடுவது பெண்களாலே' என்பது வெகு ஜன வாக்கு. நமது தமிழ் நூல்களிலும் அறன்வலியுறுத்திய பெரியோர்கள் ஆடவர் பெண்டிர் ஆகிய இருதிறத்தாருக்கும் நடு நிலைமையோடு நீதி வழங்கவில்லை என்று யாம் கூறவேண்டி யிருப்பதற்கு வருந்துகின்றோம். "பேதைமை என்பது மாதர்க் கணிகலம்" என்றும், "தையல் சொற் கேளேல்" என்றும் "பெண்டிர்க் கழகு எதிர்பேசாதிருத்தல்" என்றும், "எதிரிற் பேசும் மனையாளிற் பேய் நன்று" என்றும், "பெண்களைப் படைத்து நமனை என் செயப் படைத்தாய்" என்றும், "பெண் கொண்ட பேர்பட்ட பாட்டையும் கேட்டையும், பேசுவோமே நெஞ்சமே" என்றும்

அநேக அறிஞர் பாடி வைத்திருக்கின்றனர். தமிழ்ப் புல வரும், அறன் வகுத்த பெரியார் பலரும் பெண்களை இழிவு படுத்திச் சென்றனர் என்பதில் ஐயம் இல்லை.

"தூமகேது புவிக்கெனத் தோன்றிய வாமமேகலை மங்கைய ரால் வரும் காமமில்லை யெனிற் கடுங்கேடெனும் நாமமில்லை நகரமும் இல்லையே"

என்று மகா கவிச்சக்கரவர்த்தி கம்பரும், பெண்களாலேயே எல்லாத் தீமைகளும் விளைகின்றன; அவர்கள் இல்லாவிட்டால் உலகில் தீமை களின் பேர் கூட அகராதியில் இருக்காது, நரகம் என்பதும் இருக் காது என்று பாடி வைத்திருக்கின்றார். பெண்களைப் பற்றிச் சிந்தா மணி ஆசிரியர் திருத்தக்க தேவருடைய அபிப்பிராயத்தை முன்னர் ஒரு தடவை எடுத்துக்காட்டி யிருக்கின்றோம். திருவள்ளுவரும் ஆண்களுக்கே சலுகை காட்டி யிருக்கின்றார். ஆனால் இக்கூற்றுக் களை ஒரு நாளும் ஒப்புக்கொள்ள முடியாது என்று உறுதியாக வற் புறுத்துகின்றோம்.

சகலகலா வல்லவர்களாகிய நம் முன்னோர்கள் பெண்களின் விஷயத்தில் இத்தகைய எண்ணங் கொள்ளுவான் ஏன்? அவர்களை விட நாம் அறிவிற் சிறந்து விட்டோமா? என்ற கேள்விகள் பிறக்க லாம். நம் முன்னோர்களுடைய அறிவுடைமைக்கோ அநுபவத்திற் கோ, புலமைக்கோ இப்போது நாம் இழுக்குக் கற்பிக்க முற்பட வில்லை. அவர்கள் பெண்களை வேண்டுமென்றே தெரிந்து இழிவு படுத்தினார்கள் என்றும் யாம் கூறத்துணிய மாட்டோம். ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக வழக்கத்தில் சகஜமாகப் போய் விட்ட பெண்களின் கேவல நிலைமையே நம் முன்னோர்களை அங்ஙனம் கூறச் செய்துவிட்டது. "குருடனை ராஜா விழி விழிக்கச் சொன் னால் எப்படி விழிப்பான்?" என்று ஒரு பழமொழி உண்டு. அது போலப் பன்னெடுங் காலத்திலிருந்து கல்வி அறிவும் உலகியல் அறி வும் அடைவதற்குப் பெண்களுக்குச் சந்தர்ப்பம் அளிக்காமல் அவர் களை அறியாமையிலேயே வாழ்ந்துவரச் செய்துவிட்டபடியால் கல்வி அறிவிற் சிறந்து உலகியல் விவகாரங்களைத் தெரிந்திருக்கிற ஆடவர்களிடம் காணப்படும் சில சிறந்த குணங்கள் பெண்களிட மும் இருக்கவேண்டும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்? நம் முடைய புலவர்கள் பெண்களிடம் இருப்பதாகச் சொல்லும் பேதைமை, வஞ்சனை, சூது, சபலச் சித்தம், துரோகம் முதலிய குணங்கள் அவர்கட்குக் கடவுள் கட்டளையால் இயற்கையாகவே ஏற்பட்டிருக்கின்றன என்றாவது அவற்றை எவ்வாற்றாலும் மாற்ற முடியாது என்றாவது யாரேனும் கூறமுடியுமா என்று கேட்கின் றோம். பெண்கள் மீது ஏற்றிக் கூறப்படும் தீயகுணங்கள் ஆண்க

ளிடமும் இல்லை என்றுவது யாராவது கூறமுடியுமா என்றும் கேட்கின்றோம். கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்து விளங்குவதாகச் சொல்லப்படும் ஆடவர்களிடங்கூட அநேக தீயகுணங்களும் கூடாவொழுக்கமும் நிறைந்திருப்பதை வெகு சாதாரணமாகக் காணலாம். அங்ஙன மிருக்கக் கல்வி அறிவின்றி வெளி உலக விவகாரங்களும் தெரியாமல் "அகழியில் விழுந்த முதலைக்கு அதுவே வைகுண்டம்" என்றபடி வீடுகளில் அடைபட்டுக் கிடக்கும் பெண்களிடம் பேதைமை முதலிய குணங்கள் அமைந்து கிடப்பதில் எத்தகைய ஆச்சரியமும் இல்லை அன்றோ? நமது நாட்டில் முற்காலத்தில் எத்தனையோ பெண்மணிகள் கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்து உலகிற்கு நல்வழி காட்டி யிருக்கின்றனர் என்பதைப் பண்டை நூல்கள் வாயிலாக அறிகின்றோம். இக்காலத்திலும் நமது நாட்டில் ஆண்டுதோறும் நூற்றுக்கணக்கான பெண்மணிகள் படித்துப் பட்டதாரிகளாக வெளி வருவதையும் நாம் கண்கூடாகக் காண்கின்றோம். சில பெண்மணிகளிடம் விளங்கும் அறிவுக் கூர்மையும் மற்றைத் திறமையும் ஆடவர்களின் அறிவையும் திறமையையும் விட மீறியிருப்பதையும் நாம் கண்டு வருகின்றோம்.

இப்போது நாம் தெரிந்துகொள்ள வேண்டிய உண்மை என்னவென்பதை எல்லாரும் கவனிக்கவேண்டும். பெண்களுக்கு என்று தனியாக ஒருவகைப் பேதைமையையும் தீயகுணங்களையும், கடவுள் உண்டாக்கி அவர்கள் தலையெழுத்தாகப் போட்டு அனுப்பி விடவில்லை. ஆடவர்களிடம் எந்த எந்தக் குணங்கள் அமைந்து கிடக்கின்றனவோ அவையே பெண்களிடமும் அமைந்து கிடக்கின்றன. ஆடவர்கள் எங்ஙனம் கல்வி கேள்விகளால் தங்கள் அறிவை வளர்ச்சி செய்து நன்மை தீமைகளைப் பகுத்துணர்ந்து நல்லொழுக்கங்களைக் கைக்கொள்ளுகிறார்களோ அங்ஙனமே ஆடவர்கள் பெண்களுக்கும் சந்தர்ப்பம் அளித்தால் கல்வி கேள்விகளால் அவர்கள் தங்கள் அறிவை வளர்த்து நன்மை தீமைகளைப் பகுத்துணர்ந்து நல்லொழுக்கங்களைக் கைக்கொண்டு நடப்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் பெண்கள் தங்கள் அறிவை வளர்ச்சி செய்து கொள்வதற்கு முட்டுக்கட்டையாக நின்று ஆதிமுதல் தடை செய்தவர்கள் ஆண்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. இந்தப் பாவ விமோசனத்துக்காக ஆடவர்கள் பெண்கள் முன்னேற்ற விஷயத்தில் எவ்வளவோ தியாகம் செய்யக் கடமைப்பட்டிருக்கின்றனர்.

நமது நாட்டுப் புலவர்களும் ஏனையோரும் பெண்களை இழித்துப் பாடியிருக்கின்றனர் என்று முன்பு குறிப்பிட்டோம். அவர்கள் அக்காலத்தில் பெண்களிடம் அமைந்து கிடந்த குணங்களைத் தெரிந்தே பாடினார்கள் என்பதிலும் சந்தேகம் இல்லை. ஆனால் அக்குணங்களை மாற்றுவதற்குரிய மருந்து கல்விப்பயிற்சி என்ற உண்மையை ஏனோ அவர்கள் அவ்வளவாகக் கவனிக்கவில்லை. பெண்கள் கற்பும் நல்லொழுக்கமும் வாய்ந்தவர்களாக விளங்க வேண்டும் என்ற ஆசையால் பல நிர்ப்பந்த விதிகளை வகுத்த நம் பெரியோர்கள் அந்நறுங் குணங்கள் வளர்ந்தோங்குதற்கு ஆதாரமாயுள்ள கல்வியைப் பெண்கள் கற்றுத் தீரவேண்டும் என்று வற்புறுத்தாமல் விட்டுவிட்டது வியப்பாயிருக்கிறது. பெண்கள் எல்லாரும் மரங்கள் கற்கள் ஆகிய ஜடப்பொருள்கள் இல்லை. அவர்கட்கும் ஆன்மா உண்டு; உணர்ச்சி உண்டு. ஆதலால் இன்ப துன்ப அநுபவமும் உண்டு. எனவே இன்னும் எவ்வளவு காலத்திற்குத்தான் அவர்கள் மௌட்டியத்திலேயே மூழ்கிக் கிடப்பர்?

மேனாடுகளிலும் கீழ்த்திசை நாடுகள் சிலவற்றிலும் பெண்கள் தங்கள் உரிமைகளுக்காகக் கிளர்ச்சி செய்து வெற்றிபெற்று வருகின்றனர். அந்த நாடுகளில் பெண்களின் கிளர்ச்சிப் போர் வெகு மும்மரமாகப் போய்க்கொண்டிருக்கிறது. நமது நாட்டிலும் பெண்களுக்குள் ஒருவித விழிப்பு ஏற்பட்டு ஆங்காங்கு மகாநாடுகளும் கூட்டங்களும் நடைபெற்று வருகின்றன. நமது நாட்டுப் பெண்களின் கூட்டங்கள் பெரும்பாலும் ஆங்கிலங் கற்ற பெண் மணிகளின் முயற்சியாலேயே நடைபெறுகின்றன. பெண்கள் முன்னேற்றத்துக் குரிய பல முக்கிய தீர்மானங்களும் நிறைவேற்றப்படுகின்றன. இவற்றைத் தவிர ஆடவர்களும் பெண்களும் நிறைந்த சமூகச் சீர்திருத்த மகாநாடுகளிலும் தேசீய மகாநாடுகளிலும், வகுப்பு மகாநாடுகளிலும் பெண்கள் முன்னேற்றத்துக் குரிய தீர்மானங்கள் மிகுந்த சிரத்தையோடு கவனிக்கப்பட்டு நிறைவேற்றப்படுகின்றன. இவை யெல்லாம் மகிழ்ச்சிக் குரிய விஷயங்களாயினும் சுதந்தர வேட்கைகொண்டு பெண்கள் முன்னேற்றத்துக்காகப் பாடுபடும் பெண்களும் மற்றவர்களும் சில முக்கிய விஷயங்களைக் கவனிக்க வேண்டும்.

இல்லறத்தில்—வாழ்க்கையில் புருஷனும் மனைவியும் சமமான அந்தஸ்து உடையவர்கள் என்பதில் யாரும் ஆட்சேபணை கூற முடி

யாது. ஆண்களுக்குக் கூறப்படும் சில சிறப்பியல்புகள் பெண்களிடம் இல்லை என்றால் பெண்களிடம் அமைந்து கிடக்கும் சில சிறப்பியல்புகள் ஆண்களிடம் இல்லை என்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டும். புருஷன் பொருள் தேடி அலைவதில் அநேக கஷ்ட நஷ்டங்களை அநுபவிக்கிறான் என்பது உண்மை. ஆனால் மனைவி பிள்ளைப் பேற்றிலும், பிள்ளைகளை வளர்ப்பதிலும், புருஷனுக்குச் சாந்தியையும் இன்பத்தையும் தருவதிலும் இன்னும் அநேக தொல்லை நிரம்பிய குடும்ப நிர்வாகத்திலும் துன்பங்களை அநுபவிப்பதில்லை என்று சொல்லிவிட முடியுமா? நமது நாட்டுப் பெண்மணிகள் அடிமைகளா யிருப்பதற்கும், புருஷர்கள், மாமியார், நாத்திமார் முதலியோரின் கொடுந் துன்பங்கட்கும் பிடுங்கல்களுக்கும் உட்பட்டிருப்பதற்கும் உள்ள காரணங்களுக்குள் முக்கியமானது அவர்கட்குச் சொத்துரிமை இல்லாமையே யாகும். பெண்களுக்குச் சொத்துச் சுதந்தரம் இருக்குமானால் இப்போது அவர்களை வாட்டிவரும் துன்பங்களில் பெரும் பகுதி இருந்தவிடம் தெரியாமல் ஒழிந்து விடும். ஒரு பெண்ணுக்குக் கலியாணமானவுடன் அவளுக்குப் புருஷனைத் தவிர வேறு எந்த விதமான ஆதரவும் பற்றுக்கோடும் இல்லை. மாமியும், மருமகளும் பூனையும் எலியுமா யிருப்பது உலகப் பிரசித்தம். பரம சத்துருக்கள் ஆகி விடுகின்றனர். "மாமியார் மெச்சின மருமகள் இல்லை" என்று ஒரு பழமொழியுங்கூட ஏற்பட்டுவிட்டது. அதிலும் புருஷனோடு உடன் பிறந்த சகோதரிகள் யாராவது வீட்டில் இருந்துவிட்டாலோ ஒன்றுங் கூறவேண்டுவது இல்லை. அந்தக் குடும்பம் நரகமாகவே இருக்கும். புருஷன் எவ்வளவு கெட்டிக்காரனா யிருந்தாலும் அவன் பாடு திண்டாட்டமாகவே முடியும். இந்த மாதிரி எத்தனையோ குடும்பங்களை நாம் நேரில் பார்த்து வருகின்றோம். இவற்றிற் கெல்லாம் முக்கிய காரணம் பெண்களுக்குச் சொத்துரிமை இல்லாமையே யாகும்.

ஆண்களைப் போலவே பெண்களுக்கும் கல்வி முக்கியம் என்பதை முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். பெண்களின் கல்வி முன்னேற்றத்திற்கு அவர்களுக்குச் சொத்துச் சுதந்தரம் இருப்பது பேருதவி செய்வதாகும். கல்வி அறிவும் பொருளாதாரச் செழுமையும் பெண்களுக்கு ஏற்பட்டு விடுமாகில் பின்னர் பெண்கள் முன்னேற்றத்தைப் பற்றி யாரும் கவலை கொள்ளவேண்டிய அவசியமே இல்லை. அவர்களுக்குரிய தேவைகளையும் சீர்திருத்தங்களையும் பிறர் உதவி யின்றி அவர்களே செய்துகொள்ளுவார்கள்.

ஆதலால் பெண்கள் முன்னேற்றத்தில் தீவிர சிரத்தை காட்டும் சீர்திருத்தக்காரர் எல்லோரும் முதலில் இவ்விரண்டும் அவர்கட்குக் கிடைக்கும்படியான வழியில் முனைந்து பாடுபட வேண்டும்,

பாரம்பரை வழக்கம் ஏறி ஊறிப்போய் அதோடு அறியாமையும் நிரம்பி யிருக்கிற ஜனங்களிடையே "விவாகரத்து" போன்ற தீர்மானங்களைப் பிரசாரம் புரிவது பெரிய ஆபத்தாகும். கிரமமாக ஏற்படவேண்டிய சீர்திருத்தங்களும் அதனால் பயன் இல்லாமல் போய்விடும்.

இப்போது சாதாரணமாகச் சிறு பெண்கள் தங்கள் பேரையாவது எழுதத் தெரிந்துகொள்ளுகிற அளவுக்கு விருப்பங்காட்டி வருகிறார்கள். ஆனால் இவர்களுக்கு இது காணாது. எல்லாரும் படிப்பதும் இல்லை. பெண்களுக்கு ஆரம்பப் படிப்பு கட்டாயமா யிருக்கச் சட்டம் செய்யவேண்டும். சீர்திருத்த வாதிகளும் சட்டசபை அங்கத்தினர்களும் ஏன் இந்த விஷயத்தில் சிரத்தை செலுத்தக் கூடாது என்று கேட்கின்றோம், ஒவ்வொரு நகர பரிபாலன சபையும் பெண்களுக்குக் கட்டாயக் கல்வி கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். ஏழைக் குடும்பத்தில் பிறந்த பெண் குழந்தைகளுக்கு அந்த அந்த நகர பரிபாலன சபையின் தகுதிக் கேற்ப போஷணை உதவியும் செய்யவேண்டும்.

பெண்களுக்குக் கொடுக்கப்படும் கல்வியில் அவர்களுடைய ஜீவனத்திற்கு அவர்கள் சம்பாதித்துக் கொள்ளும்படியான அமிசங்கள் கலந்திருக்க வேண்டும். பெண்களின் சுதந்தரத்துக்கு இது உதவியா யிருப்பதோடு எளிய குடும்பத்தில் உள்ளவர்கட்கு இது மிகவும் உபயோகமா யிருக்கும்.

உபயோக மற்ற வழிகளில் பெண்கள் சுதந்தரம் பெண்கள் சுதந்தரம் என்று கூறுவதை விட நாம் மேலே எடுத்துக் காட்டிய நலங்களைப் பெறத் தீவிர முயற்சி செய்யுமாறு எல்லாரையும் வேண்டிக் கொள்கின்றோம். திருவருள் நம்முடைய கோரிக்கைகளைப் பூர்த்தி செய்வதாக.

ஓம் தத் சத்.



# முப்பொருளுண்மை



## 2. மனிதன்

மண்ணிடைப் பொருளின் மாண்புடை யுருவே!
எண்ணியாங் கியற்றும் இயல்புமிக் குள்ளோய்!
காதற் கடலிடைக் கலங்குமென் கலத்தோய்!
சாதல் பிறத்தல் சழக்கிடைச் சுழல்வோய்!
நின்றுள் உலகில் நிலை பெறும் வரையும்,
இன்புறுங் காலைத் துன்பினை நினையாய்,
துன்புறுங் காலை இன்பிற் கழுங்குவை
உண்ணலும், உறங்கலும், உவத்தலும் அன்றி
எண்ணரும் வினையினை யெண்ணியுள் உருகுவை—அதான்று
வலியவர்க் கடங்குவை, எளியரை வருத்துவை!
நலிவுறுங் காலை நயம்பட நடிப்பை.
என்னே நின்மதி! என்னே நின்கதி!
மன்னே யெனினும் மகிழ் நிலையின்றால் —மனுவே
கலங்கலை என்றுங் கண்ணீருகுத்து
நலங்கொளு மின்பம் நண்ணுதல்வேண்டில்
மலைவுறுதெதையும் மயக்கறத்தெளிந்து,
அங்ஙனே அங்ஙனே அமையுமா றற்றுச்
செய்க செயலினை செயற் பலன் கருதாது
உய்க, தினம் உகந்து உள்ளவாறுகுக!
நிலையுறும் பேறு நிச்சயம் நினைக்கே.

தொண்டைமான் முத்தையன்
திருநெல்வேலி.





## மத பேதம்.

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

சவ்ய பூஜையே விசேஷமானது. வைணவருள்ளும் இவ்வகைப் பேத முண்டென்பார். திருக்கடவூரில் அபிராமிபட்டர் என்னும் பெரியாரொருவர் இருந்தனர். அவருடைய சந்ததியாருக்கு இன்றைக்கும் செய்குறுணி அளிக்கப்படுகிறது. அவர்கள் அபிராமி யந்தாதி என்று ஒரு பிரபந்தம் பாடி அமாவாசையில் சந்திரனை வரப்பணித்தவர். அந்த அந்தாதி இன்னும் பிரசித்தியுடனிலங்குகின்றது. அதனைச் சக்திபூஜை செய்யும் பக்தர்கள் பாராயணம் செய்வது பிரசித்தம். திருவானைக்காவில் ஐயனு ஐயர் என்பவர் ஒருவரிருந்தார். இவர் சந்ததி பூதலூரிலுமிருந்தது. மதுரையில் மீனாட்சி தாசர் என்பவர் ஒருவரிருந்தார். இவை யெல்லாம் ஜகத்பிரசித்தம்

சவ்ய அபசவ்ய பூஜைகளில் சவ்ய பூஜைக்குச் சமானம் ஒன்றுமில்லை. சித்த நிலைபெற்றவர்கட்கு எல்லாம் சரியாய் நடக்கும். இப்படியே சுப்பிரமணிய மதத்திலுமுண்டு. அதில் ஐயனார் முதலியவர்களின் பூஜை சொல்லப்பட்டிருககிறது.

இவை நித்தியமல்ல. நித்தியமாயுள்ளது சவ்ய பூஜையேயாம். இதில் குறைபாடு நேராது. இவை யெல்லாம் சற்குரு-சேவையினாலே அடையத்தக்கவை.

நக்கீரதேவர், அருணகிரிநாதர், பொய்யாமொழிப் புலவர் முதலியோர் சுப்பிரமணிய பக்தர்கள். இவர்களில் நக்கீரரும் அருணகிரிநாதரும் பாசுரங்களால் வழிப்பட்டுப் பேறு பெற்றவர்கள். இதுபற்றிப் பிறகு விவரிப்போம்.

உபதேசக் கிரமமின்றி ஒன்றும் நடவாதாகையினால் புத்திமான்கள் சதாசாரியனை அடைதல்வேண்டும். அவருடைய திருவருளால் யாவற்றையும் பெறவேண்டும். சற்குரு கடாட்சம் பெற்றவர்க்கு எல்லாநலனும் கை கூடும்.

பொய்யாமொழிப் புலவர் தஞ்சைவாணன் கோவை யென்றொரு நூல் இயற்றியருளினார். அந்நூல் மிகப் பிரசித்தியா யிருப்பது யாவரும் அறிந்த விஷயம்.

இவர் ஒரு சமயம் பாண்டியன் முன்—

'உங்களிலே யானொருவ னொவ்வுவனோ ஒவ்வேனோ
திங்கட் குறியச் செப்புங்கள்—சங்கத்துப்
பாடுகின்ற முத்தமிழ்க்கென் பைந்தமிழு மொக்குமோ
ஏடெழுதா தேழெழுவீரின்று "

என்று பாடிச் சங்கப் புலவர்கள் திருவுருவம் சிறக்கம்ப முறச் செய்தனர். பின்,

"பூவேந்தர் முன்போற் புரப்பா ரிலையன்றிப்
பாவேந்த ருண்டென்னும் பான்மைதான்—மாவேந்தன்
மாறனறிய மதுராபுரித் தமிழோர்
வீறனையே சற்றே மிதக்க"

என்று பாடிச் சங்கப் பலகையை மிதக்க வைத்தனர்.

இத்துணைச் சிறப்புடைய இப்புலவரைப் பாண்டிய மன்னர் சரியாய்ச் சன்மானிக்கவில்லை. பாண்டியனுடைய மனைவி நல்ல ஞானமும் பக்தியுமுடையவள். அவள் பொய்யா மொழிப் புலவரைச் சன்மானிக்க வெண்ணி அவர் பல்லக்கைச் சுமந்தனள். அதை யறிந்த புலவர்,—

"உமையவளும் நீயும்"

என்னும் முதற் குறிப்புள்ள செய்யுளைப் பாடி அவ்வம்மையைச் சிறப்பித்தனர்.

நக்கீரர் மலையைப் பிளந்து பூதத்தைக் கொன்று அநேக புலவர்களைக் காப்பாற்றியதும் அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய ஆற்றுப்படையைப் பாராயணம் செய்து பக்தர்கள் இஷ்ட காமியார்த்தங்களை யடைவதும் பிரசித்தமாம். அருணகிரியாரின் மகிமையை அறியாதாரில்லை. அவர் பாடிய திருப்புகழைப் பாடாத சங்கீத வித்வான்களுமில்லை. அந்த இனிய பாடலைக் கேளாத செவிகளுமில்லை யென்னலாம்.

அருணகிரிநாதரும் ஔவையாரும் வேத இரகஸ்யங்களை வெளியிடத் துணிந்தவர்கள். மகாவிஷ்ணுவை ஆராதனை செய்து பேறு பெற்றவர்கள் அநந்தம். ஆயினும் அவர்கள் வைகாநஸம் போதாயனம் என்னும் முறைகளையே அநுசரித்தனர். இக்காலத்து வைணவர் பாஞ்சராத்ர முறைப்படி ஆராதிக்கின்றனர். அத்வைதிகள் வேதநெறிப்படியே பூஜிக்கின்றனர். அத்வைதத்தில் அடங்காத மதமில்லையாதலால் அதனையே சிலாக்யமாகக் கொண்டாடுகிறார்கள். பாகவதம் என்னும் நூல் கண்ணனை அத்வைத பரமாகவே துதிக்கின்றது. எந்த முறைபற்றியாவது தேவனையாராதிக்க வேண்டுமென்பதே வேதாதி நூல்களின் துணிபு.

மகாதேவனாகிய பரமசிவனைப் பூஜை செய்வது உசிதம். சிவபூஜைக்கு அகஸ்தியர், ததீசி, உபமந்யு, குரு என்பவர்களியற்றிய ஆகமங்கள் சிறப்புடையவைகளாம். உபமந்யு இதைப்பற்றி ஸ்ரீ கண்ணனுக்கு உபதேசித்திருக்கிறார். இந்த உபமந்யுவே திருப்பாற்கடலைக் குடித்தவரென்று பாரதம் கூறுகின்றது. மகாதேவரைப் பிரத்யட்சமாய்க் கண்டவர்களில் இவரை மேற்பட்டவர்களில்லை. ஆக வைதிக சிவாகமங்கள் இந் நான்குமேயாம்.

பத்திர புஷ்பங்களால் ஆராதிக்க முடியாதபோது அரிசி அக்ஷதைகளால் அர்ச்சிக்கலாம். இந்தப் பூஜையில் பார்த்திப லிங்க பூஜை யென்று ஒரு பூஜையுண்டு. அது சர்வ சிலாக்யமானது. எல்லோராலு மாராதிக்கத் தக்கது. இதற்குப் பொருளாதி எதுவும் தேவையில்லை. எந்த இடத்தில் நினைத்தாலும் அங்கிருந்தே செய்யத்தக்கது. அர்ஜுனன் செய்தது பார்த்திப பூஜையேயாகும். அந்தப் பூஜையே அவனடைந்த பெருமைகளுக்கெல்லாம் ஆதாரமா யிருந்தது.

# அரும் தமிழ் வளர்த்த ஐயர்

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.)

சமய பேதங்களாலும் சாதி பேதங்களாலும் தளர்வுறாது, அக் காலத்தில் தமிழ்மொழி தழைத் தோங்குவதாயிற்று. தமிழ் மொழியின் இனிமையையும் பெருமையையும் அறிந்த எந்நாட்டவரும், எம்மதத்தவரும், அதனைப்போற்றி வளர்க்கத் தலைப்பட்டார்கள். சைவரும் வைணவரும், சமணரும் சாக்கியரும், துருக்கரும், கிருஸ்தவரும் அமிழ்தினுமினிய தமிழ் மொழியை ஆதரித்து வளர்த்த அருமை, தென்மொழி வரலாற்றில் தெள்ளிதில் விளங்கக் காணலாம். இம்முறையில் இருநூறு ஆண்டுகட்கு முன்னர், இத்தாலியா நாட்டினின்றும் இந்நாடு போந்து, அருந்தமிழை ஆர்வத்தோடு பயின்று, அதன் சுவை யறிந்து போற்றிய வீரமா முனிவரது பெருமையை ஈண்டு ஆராய்வாம்.

இத்தாலியா நாட்டில் பெஸ்கி யென்னும் இயற்பெயர் பெற்று தமக்கென வாழாப் பிறர்க் குரியாளராய் விளங்கிய இப்பெரியார், இளமையிலேயே இல்லறம் துறந்து, இயேசு நாதரது சேவையில் ஈடுபட்டு நின்றார். அப்பெருமானது செம்மையை ஐரோப்பிய மக்களே யன்றிப் பாரத மக்களும் அறிந்துய்ய வேண்டுமென்னும் ஆர்வத்தால் இந்நாடு போந்து முப்பத்தைந்து ஆண்டு தென்னாட்டில் தங்கி வாழ்வா ராயினர். தமிழ்ப் பெருமக்களது பழக்க வழக்கங்களையும், தமிழ் மொழியிலமைந்த இருவழக்குகளையும், இனிதறிந்து, இலக்கிய இலக்கணங்களை ஐயந்திரிபற ஓதி யுணர்ந்தார். பலகலை யறிந்த இப்பெரியார் வீரமா முனிவரென்னும் புதுப் பெயர் புனைந்து, அருந் தமிழ் மொழியில் அருமை சான்ற பல நூல்கள் அருளிப் போந்தார்.

அக்காலத்தில், தென்னாடு மகம்மதிய மன்னரது ஆளுகையில் அமர்ந்திருந்தது. அம்மன்னரது ஆதரவு பெற்றாலன்றித் தாம் கருதிய நோக்கம் நிறைவேறா தென்று அறிந்த முனிவர், பாரசீக மொழியையும், இந்தி மொழியையும், பண்புறப் பயின்று, அம்மொழிகளிற் செம்மையாய்ப் பேசும் திறம் பெற்றார். சிறந்த மதி நலமும், செம்மை சான்ற நூலறிவும் வாய்ந்த முனிவர் தென்னாடாண்ட சண்டா சாகிப் என்னும் நவாப்பைக் கண்டு, அவனிடம் சிறிது அரசியல் முறை பற்றி உரையாடினார்.

மதி நலம்வாய்ந்த அம்மகமதிய மன்னன், முனிவரது நாவன்மையையும் நல்லறிவையும் பலவாறு வியந்து, நல்லூர், அரசூர் முதலிய நான்கு சிற்றூர்

களை மானியமாக வழங்கி, திவான் பதவியும் ஓர் அழகிய சிவிகையும் அளித்தான். அரசாங்க வேலையாய் முனிவர் வெளிப்படும் பொழுது, செவ்வையாய் அலங்கரிக்கப்பட்ட வெண்குதிரை மீது ஆடம்பரமாகச் செல்வார். ஆயினும் முனிவரது மனம், தாமரை இலையிற்றங்கிய தண்ணீர்த் துளிபோல், உலகப் பொருள்களிற் பற்றற்ற உயரிய நிலையில் நின்றது. மன்னனிடம் மானியமாய்ப் பெற்ற நிலங்களின் வருவாயை, வறியவர்க்கு வரையாது வழங்கி மகிழ்ந்தார். வருந்தி வந்த ஏழை மாந்தரது அரும்பசி களைந்து, அவரது திருந்திய முகங்கண்டு திளைத்தார். "எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்" என்னும் இன்னுரையின் உண்மையை, இடையறாது எடுத்து மொழிந்து, இளைஞரது கல்வியைக் கண்ணும் கருத்துமாய்ப் போற்றி வளர்த்தார்.

இவ்வாறு அரசாங்க வேலையில் அமர்ந்திருப்பினும், முனிவரது மனம், நறு மணங்கமழும் தமிழ்ப் பூஞ்சோலையிலேயே உலாவித் திரிந்து இளைப்பாறுவதாயிற்று. தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் அருளிய திருக்குறளைப் பன்முறை ஓதி யுணர்ந்து, அந்நூலின் அறப்பாலையும், பொருட் பாலையும், மேலை நாட்டுச் செம்மொழியாய லத்தீன் பாஷையில் மொழி பெயர்த்தமைத்தார். இவ்வாறு இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் பயக்கத்தக்க அறநூலின் பெருமை யறிந்து, மேற்புலமக்களும் மேம்படுமாறு, அந்நாட்டுச் செம்மொழியில் அமைத் தருளிய முனிவரது ஆர்வம், என்றும் போற்றத் தக்கதாகும். இக் காலத்தில் மேலை நாட்டில் வழங்கும் பன்னிரு மொழிகளில் வள்ளுவர் வாய் மொழி வளமுறத்திகழு மாறு, வழி காட்டிய பெருமை வீரமா முனிவர்க்கே உரியதாகும்.

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான் புகழ்கொண்ட தமிழ்நாடு"

என்று இக் காலத்திய கவிஞர் பாடிய புகழுரைக்கு அடிப்படை கோலிய பெருமையும் அடிகட்கே உரியதாகும்.

இன்னும் வீரமாமுனிவர் கதலிக சமயச் சார்பாக, வேதியர் ஒழுக்கம், வேத விளக்கம் என்னும் இருநூலியற்றி வேத நெறியை விளக்கினார். பேதக மறுத்தல், ஞான முணர்த்தல் என்னும் தமிழ்நூல்களின் வாயிலாக மெய்ஞ்ஞான முறையை வகுத்துரைத்தார். காவலூர்க் கலம்பகம், அடைக் கல மாலை, கலிவெண்பா என்னும் மூந்நூல்களில் கன்னியின் பெருமையைக் கனிந்த மொழிகளால் அருளினார். இன்னும் கற்றோரும் மற்றோரும் படித்துப் பயன் பெறுமாறு வேமன் கதை முதலிய சிறு நூல்களும் செய்தனர்.

இவ்வாறு தமது மதத்திற்கு உழைத்த முனிவர், அருந்தமிழ் மொழிக்கும் பெரும் பணியாற்றி யுள்ளார். செந்தமிழ் மொழியிற் பயிலும் சொற்களை

வகுத்தும் தொகுத்தும், சதுர அகராதி யென்னும் பெயரால், ஓர் அரிய நூல் இயற்றினர். இதுவே, நம் தாய் மொழியில் ஆதி அகராதியா யமைந்து பின்னெழுந்த பேரகராதிகட்கெல்லாம் முன் மாதிரியாய் நிற்ப தென்று கூறுதல் மிகையாகாது. இன்னும் சமண முனிவர் இயற்றிய 'நன்னூல்' போன்று தொன்னூல் என்னும் பெயரால் செந்தமிழ் இலக்கணம் செப்பமா யமைத்தும், 'கொடுந்தமிழ்' என்னும் பெயரால் வழக்காற்றி லமைந்த இயற்றமிழுக்கு இலக்கணம் வரைந்தும், தண்டமிழ் மொழிக்குத் தொண்டு செய்தார்.

இவ்வாறாக இம்முனிவர் இயற்றிய இருபத்தொரு நூல்களில், இக் காலத்திற் காணக்கிடைப்பன சிலவே யெனினும், அடிகளது பெருமைக்கு என்றும் அழியாச் சான்று பகர்வது, 'தேம்பாவணி' என்னும் நயம் சான்ற நூலேயாகும். முப்பது காண்டங்களா லியன்ற இந்நூல் தொன்னூல் வழி நின்று, சொல் நயம் பொருள் நயம் பொருந்திக் கற்போர் கருத்தைக் கவர் கின்றது. இந்நூல் நுதலிய பொருள் வேதப் பொருளா யிருத்தலாலோ, அன்றி வேறு எக் காரணத்தாலோ, இக் காலத்தில் 'தேம்பாவணி' உரிய முறையில் ஓம்பப்படாத குறை வருந்தத் தக்கதாகும். தமிழன்னையின் கழுத்தில் வாடா மாலையாய் விளங்கும், தேம்பவாணியின் பொருளை, ஆசிரியர் அறிவிக்கும் முறை அழகு வாய்ந்த தாகும்.

"காம்பாவணி காட்டிய கன்னி நலத்
தோம்பாவணி இவ்வணி யோர்ந்த பிரான்
நாம்பாவணி நம்பியை நல்கிடவோர்
தேம்பாவணி யாம் கொடி சேர்த்த னென்றார்"

என்னும் கவியில் தேம்பாவணி இனி திலங்கக் காணலாம். திருக்குற ளின் தீஞ்சுவையும், சிந்தாமணியின் செழுஞ்சுவையும் கம்பன் கவிச்சுவையும் தாங்கி, இனிய செஞ் சொல் மாலையாய் இலங்கும் தேம்பாவணியின் பெருமை, ஒரு முறை ஓதினார்க்கும் இனிது விளங்கும். முக்கனியின் சுவை பிழிந்து வண்ணக் கிண்ணத்தில் அமைத்தாற் போன்று முந்நூலின் சுவை யை வடித் தெடுத்துதவிய வீரமா முனிவரது ஆர்வம், என்றும் தமிழ் மக்க ளாற் போற்றத் தக்கதாகும். இந்நூலின் கவிச்சுவையை அடுத்தகட்டுரை யில் ஆராய்வோம்.

இவ்வாறு தமிழ் மொழிக்குத் திருந்தியபணி செய்த முனிவர், பழுத்த முதுமை யெய்திப் பொருனை நாட்டி லமைந்த மணப்பாடென்னும் சிற்றூரிற் சென்று வாழ்வா ராயினர். பழுத்தமேனியிற் பழுப்புடை தரித்து, இடை

யிற் கச்சை புனைந்து பதமிட்ட புலித்தோல்மீது அமர்ந்து, பரமனது பெரும கருணையை நினைந்துருகும் முனிவரது கோலம் கல்நெஞ்சையும் கரைப்ப தாகும். புலித்தோல் விரித்த பூஞ்சிவிகையில், இருமருங்கும் அன்பர் மயில் விசிறி வீச, அழகிய பெருங்குடை முன்னே செல்ல பழுத்த தமிழ்ப் புலமை வாய்ந்த முனிவர், வெளியே எழுந்தருளும் பான்மையை, ஓர் ஆங்கிலப் புலவர் அழகுற எழுதியமைத்துள்ளார்.

"வலம்புரி புரையும் வால்நரை முடியினர்
மாசறவிமைக்கும் உருவினர்
இகலொடு செற்றம் நீக்கிய மனத்தினர்
கற்றோர் யாவரும் அறியா அறிவினர்"

என்று திருமுருகாற்றுப் படையில் நற்றமிழ்ப் புலவராய நக்கீரர் எழுதிய முனிவர் கோலம், வீரமாமுனிவரிடம் விளங்கக் காணலாம். இவ்வாறு பன்னாள் இசைபட வாழ்ந்து கி. பி. 1742-ம் ஆண்டில் வீரமாமுனிவர், இம் மண்ணுலக வாழ்வை நீத்து விண்ணுலக வாழ்வை விரும்பினர். இப்பெரியார் முதுமைப்பருவத்தில் வாழ்ந்த மணப்பாடென்னும் மணியூர், செல்வம் மலிந்த சிற்றூராய்ச் செம்மையுற்று இன்றும் பொருனை நாட்டில் விளங்குகின்றது.

---

## சந்தா நேயர்களுக்கு

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகை ஒவ்வொரு தமிழ் மாத முதல் தேதியிலும் எக்காரணத்தை முன்னிட்டும் நிறுத்தப்படாமல் தபாலில் சேர்க்கப்பட்டு வந்தும் சிலர் சஞ்சிகை கிடைக்கவில்லை என்று எமக்கு அடிக்கடி தெரிவிக்கின்றனர். இந்த நண்பர்கள் அந்த அந்த ஊர் போஸ்டு மாஸ்டருக்கு விஷயந் தெரிவித்தால் சஞ்சிகைகள் ஒழுங்காகக் கிடைத்து வரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

ப-ர்.





## வேதாந்த சூடாமணி வசனம்.

(தமிழ்ப் பண்டிதர் பூ. ஸ்ரீநிவாசன்.)

முன்னர் கூறிய கருமகாண்டி முதலிய அதிகாரிகளை யன்றி, விவேகத்தினாலும் விராகத்தினாலும் தெய்வகதியினாலும் மூத்தி எய்தற்கேற்ற அதிகாரிகளு முளர். அவர்களுள்,

(1) "உலகமுதல் யாதெனத்தேர் வொடுகுருவை யடைந்து உயர் தரு ஞானிகளாகி மூத்தி யுற்றிடுவோர்." 'காணப்படுகின்ற பஞ்சபூத பௌதிகமாயுள்ள இவ்வுலகம் எப்படி யுண்டாயிற்று? இதற்கு முதற்காரண வஸ்து எது?' என்பன போன்ற விஷயங்களை விசாரணை செய்வது மன்றி, குருவை யடுத்து, பிரஹ்மோபதேசம் பெற்று மூத்தி பெறுவோரே விவேகத்தால் மூத்தியடையு மதிகாரிகளாவர்.

(2) "உடம்பாதி பொய்யெனக் கண்டருட் குருவை யடைந்து உயர் தரு ஞானிகளாகி மூத்தியுற்றிடுவோர்." தேகாதிப் பிரபஞ்ச மனைத்தும் பொய்யென் றறிந்து அவற்றின் மீதுள்ள பற்றினை யொழித்து, விராகியாய்ச் சதாசாரியனை யடுத்து ஞானோபதேசம் செய்யப்பெற்று, அதனால் ஞானியராய் விளங்கி மூத்திபெறுவோரே விரக்தியினால் மூத்தியடையு மதிகாரிகளாவர்.

(3) "உலகிலொரு குரவன்றன் மகற் குபதேசஞ் செய்துறக்கேட்டு உயர் தருஞானிகளாகி மூத்தியுற்றிடுவோர்." மோட்சாபேட்சையோடு ஆசாரியனை யடுத்து ஞானோபதேசம் பெறவேண்டு மென்னும் விருப்பமில்லாதவரா யிருந்தும், 'ஒரு குருவானவர் தம் சீடனுக்கு இவ்வாறு உபதேசஞ் செய்தார்' எனப் பிறர் சொல்லிக்கொண் டிருக்கையில், அதனைத் தெய்வகதியாய்க் கேட்டு, அவ்வாறு கேட்ட மாத்திரத்தினாலே பூர்வ புண்ணிய பரிபாக விசேஷத்தால் ஞானம் உதிக்கப்பெற்று பிரஹ்ம ஞானியராய் மூத்தி பெறுவோரே தெய்வகதியால் மூத்தியடையு மதிகாரிகளாவர்.

(இவ்வாற்றால் கருமகாண்டி பக்திகாண்டி ஞானகாண்டி முதலிய அதிகாரிகளின் பேதம் கூறப்பட்டது. இனி, பலதிறப்பட்ட அதிகாரிகளின் பக்குவம் நோக்கி உபதேசஞ் செய்யத்தக்க ஆசாரியர்களும் பலவகைப் படுவோராகலின் அவர்களின் பேதம் கூறப்படுகின்றது.)

## குரு பேதம்

"சாதகர்களாஞ் சீடர் பேதத்தாற் குரவர் தாமும்போ தககுருவே முத லாக விருநாற் பேதமடைகுவர்."

மோட்ச மடைதல் வேண்டுமென்னு மிச்சை யுடையவர்களாய் அதற் கேற்ற சாதனங்களைச் செய்கின்ற சீடர்கள் பல திறத்தினரா யிருத்தலின், அதிகார பேதம் நோக்கி அவர்களுக்கு உபதேசம் செய்யத்தக்க ஆசாரியர் களும் போதககுரு, வேதககுரு, நிஷித்தகுரு, காமியகுரு, சூசககுரு, வாசக குரு, காரககுரு, விகிதகுரு என எட்டுவகைப் படுவர். அவர்களுள்,

(1) "போதகன் முன்னூலிற் பெரும் பொருள் கூறிடுபவன்." எல்லா நூல்களுக்கும் முதல் நூலாகிய வேதம், அதற் கங்கமாகவுள்ள சாஸ்திரம் முதலிய நூல்களின் பொருளைப் போதிப்பவன் போதக குருவாம்.

(2) "தத்துவம் நிகழ்த்துபவனே வேதகன்." தத்துவங்களின் வகை களை விளங்க வுரைப்பவன் வேதக குருவாம்.

(3) "நல் வசியாதி யாலிம்மை யின்பம் வெந்துயரங்குதவுமவ னிசித குரு." வசியம் முதலியவற்றைக் கற்பித்து அவற்றின் பயனை இம்மையி லின்பத்தையும் மறுமையில் கொடுந் துன்பத்தையும் அடைவிப்பவன் நிஷித்த குருவாம்.

(4) "அறத்தைப் போதகஞ்செய் திருமையினு மின்பமருள் பவனே புகழ்தருகாமிய குருவென் றறைகுவர் மூதறிஞர்." தரும மார்க்கங்களைப் போதித்து இம்மை மறுமை யிரண்டிலும் இன்பத்தை யடைவிப்போன் காமிய குருவாம்.

(5) "சூசகனும் விவேகத்தாற் சமை முதலிலாங் குணங்கள் தொகுப் பவன்." விவேகத்தை (நித்தியா நித்தியவஸ்து விவேகத்தை)ப் போதித்து அதன் வாயிலாக சமாதிஷட்க சம்பத்தியை எய்தச் செய்பவன் சூசக குருவாம்.

(6) 'பொய் விடயமென ஆன்ம விருப் பருள்வோன் வாசகனும்." ஆராய்ச்சி வாயிலாக விஷயங்க ளனைத்தும் பொய் யெனவும் ஆன்மா வொன்றே சத்தியப் பொருளெனவுங் காட்டி, விஷயங்களினிடத்து வெறுப் பும் ஆன்மாவினிடத்து விருப்பும் உண்டாக்குபவன் வாசக குருவாம்.

(7) "சிவ சீவ ரயிக்கிய ஞானத்தை வழங்குமவன் காரகன்." ஜீவப் பிரஹ்மைக்கிய ஞானத்தை யுபதேசிப்பவன் காரக குருவாம். (காரககுரு= காரணகுரு)

(8) "ஐயந் தவிர்த்து நிலைத்த ஆசகலு முத்தியருள்பவன் விகிதகுரு வாம்." சந்தேகங்களை நீக்கி நித்தியநிருமல மோட்சத்தை யருள்பவன் விகித குருவாம்.

### சீடன் விதிவத் உபசன்னத்துவம்

ஞான சற்குருவை அடைந்து தத்துவோபதேசம் பெறுதற்குரிய அதி காரிகளிவராவர் என முன்னர்க் கூறிய அதிகாரிகளி லொருவன், தாகம்

நோய் காமம் முதலிய தன்னைப்பற்றி வருந் துன்பமாகிய அத்தியாத்ம தாபம், பகைவர் கள்வர் விலங்கு முதலிய பிற வுயிர்களைப்பற்றி வருந் துன்பமாகிய அதிபூததாபம், சீதம் உஷ்ணம் மழை இடி முதலியவற்றா லுண்டாந் துன்பமாகிய அதிதெய்வதாபம் என்னும் மூன்று வகைப்பட்ட தாபங்களாகிய அக்கினியினால் வெந்து வியாகூல மடைந்தவனாகி 'நான் யார்? இக்கொடிய பிறவி எனக்கு எப்படி வந்தது? இது எப்படி யாரால் நசிக்கும்?' என்பனவற்றை விசாரித்து, 'ஞானாசாரியனாலேயே இச்சம்சாரதுக்கம் நாசமாம்' என்பதை யுணர்ந்து, அவரைத்தேடி யடைய விரும்பி, 'பெரியோர்கள் சன்னிதானத்திற்கு வெறுங்கையோடு போகலாகா' தென்பது விதியாகலின் புஷ்பம் முதலியவற்றை யெடுத்துச்சென்று, அழிவடைதலில்லாத வித்தை, அறிவு, அடக்கம், விராகம் முதலிய குணங்களைப் பெற்றுள்ள ஞான சற்குருவைத் தேடிக் கண்டு, அவரது பாத மலர்களில் தான் கொண்டு சென்ற மலர்களையிட்டு, சாஷ்டாங்கமாகத் தரையில் விழுந்து நமஸ்காரஞ் செய்து எழுந்து எதிரிலே கைகளைக் கூப்பி நின்று, தோத்திரஞ் செய்து 'கிருபைக் கடலாகிய குருநாதா! அடியேனைப் பந்தித்து வருத்துகின்ற சம்சாரமாகிய தளையை நான் எதனாற் போக்குவேன்? அவ்வுபாயத்தைக் கிருபை செய்து காப்பாற்றி யருளவேண்டும்' எனப் பிரார்த்தித்தல் வேண்டும். இவ்வாறு குருவைச் சரண மடைதலே விதிவத் உபசன்னத்துவம் எனப்படும். விதிவத் உபசன்னத்துவம்=விதிப்படி சரண மடையுந் தன்மை.)

## குரு உபதேசம் செய்தல்

இவ்வாறு தம்மைச் சரணமாக அடைந்தவனைக் குருவானவர் 'இவன் ஞானோபதேசத்தைப் பெறுதற் கேற்ற அதிகாரியா யிருக்கின்றனா?' என்பதைப் பல வழிகளாலும் ஆராய்ந்து பார்த்தல் வேண்டும். அவ்வாராய்ச்சியால் பக்குவியே யென்றறிந்தால், பிறகு, அவனைக் கிருபா கடாக்ஷத்தோடு பார்த்து 'மைந்த! பயப்படாதே. சமுசார பந்தத்தைத் தொலைக்கு முபாயத்தை உனக்குக் கூறுவோம். அதனை நீ பாதுகாக்கக் கடவை' எனக் கூறி, அதற்கடையாளமாகத் தம் கரத்தை (அபயாஸ்தத்தை) அவன் சிரத்தின் மீது வைத்து, அதுகாறும் 'பொருளைப் பொருளாகக் கருதாது, பொருளல்லவற்றைப் பொருளாக' மதித்திருந்த அவனது அஞ்ஞான புத்தியைச் சுருதி யுக்திகளா லொழித்து, நாதான்மிய (அபேத) வாக்கியமாகிய தத்துவமசி மகாவாக்கியத்தை யுபதேசித்து அதன் மூலமாக 'நீ இன்ன தன்மையினதென்று மனத்தால் நினைத்தற்கு மரியதாகிய ஒப்பற்ற பரபிரஹ்ம சொரூபமாகவே யிருக்கிறாய்' என்று அவனது எதார்த்த நிலையை உணர்த்துதல் வேண்டும். இதுவே குருவானவர் செய்யும் உபதேசமாம்.

## உபதேச முறை

இத்தன்மையினதாகிய உபதேசத்தின் கிரமமானது (1) உத்தேசம். (2) இலக்கணம் (3) சோதனை (பரீட்சை) என்னு மூன்றினையும் உடையதாயிருக்கும். அவற்றுள்,

(1) உத்தேசம்:—"அறிய வுணர்த்துறு பொருளை நாமமாத்திரத்தாலறைந்திடுத லுத்தேசம்." தான் அறிவிக்க விரும்பும் பொருளின் பெயரை மாத்திரம் கூறுதல் உத்தேசமாம். இங்கு பிரஹ்மப் பொருளின் பெயரை மாத்திரம் கூறுதல் உத்தேசமாம்.

(2) இலக்கணம்:—"களகம்பளமாங் குறியுடைய தானெனல்போல் அப்பொருளிற் சிறந்த குறியுரைத்த விலக்கணம்." பசுவாகிய பொருளி னிலக்கணத்தை யறிவிக்க விரும்பு மொருவன் 'அலேதாடி (களகம்பளம்) யாகிய குறியினை யுடையது பசு எனக் கூறுதல்போல, முன்னர் பெயரளவிற் கூறிய பொருளின் சிறந்த குறியைக் கூறுதல் இலக்கணமாம். இங்கு 'அது (பிரஹ்மப் பொருள்) சச்சிதானந்த வடிவா யுள்ளது' என்று அதன் சிறந்த குறியுரைத்தல் இலக்கணம்.

(ஒன்றிற் சிறப்பா யிருப்பதாகிய குறி இலக்கணமெனப்படும். இஃது (இலக்கணம்) அவ்வியாப்தி, அதிவியாப்தி, அசம்பவம் என்னும் மூக்குற்றங் களுமின்றி யிருக்கும். இங்ஙன மிருப்பதே சத்லக்ஷணம் எனப்படும். மேற் கூறிய குற்றங்களுள் யாதேனுமோர் குற்றத்துடன் கூடிய விலக்கணம் அசத் லக்ஷண மெனப்படும்.

(1) இலக்கியத்தின் (பொருளின்) ஏகதேசத்தில் இலக்கண மிருத்தல் அவ்வியாப்தி எனப்படும்.

இதற் குதாரணம்:—'கபிலநிற முடையது பசு' என்றற் போல்வதாம். கபிலநிற முடைமை பசுவடிவ இலக்கியத்தின் ஏகதேசத்தி லிருப்பதன்றி முற்று மிராமையின் 'கபிலநிற முடையது பசு' என்னு மிலக்கணம் அவ் வியாப்திக் குற்ற முடையதாம்.

(2) இலக்கியத்திலே மாத்திரமன்றி இலக்கிய மல்லாததி னிடத்தும் இலக்கண மிருத்தல் அதி வியாப்தி எனப்படும்.

இதற் குதாரணம்:—'கொம்புடையது பசு' என்றற் போல்வதாம். கொம்புடைமை இலக்கியமாகிய ஆ (பசு) முற்று மிருப்பதன்றி இலக்கிய மல்லாத எருமை ஆடு முதலியவற்றின் கண்ணு மிருத்தலின் 'கொம்புடை யது பசு' என்னு மிலக்கணம் அதிவியாப்திக் குற்ற முடையதாம்.

(3) இலக்கியத்தி லிராது இலக்கிய மல்லாததன் கண் இலக்கண மிருத்தல் அசம்பவம் எனப்படும்.

இதற் குதாரணம்:—'ஒற்றைக் குளம்புடையது பசு' என்றற்போல்வ தாம். ஒற்றைக் குளம்புடைமை இலக்கியமாகிய ஆவிலிராது இலக்கிய மல்லாத குதிரையின்க ணிருத்தலின் 'ஒற்றைக் குளம்புடையது பசு' என்னு மிலக்கணம் அசம்பவக் குற்ற முடையதாம். எனத் தர்க்க பரிபாஷை கூறு வது ஈண்டறியத் தக்கதாம்.

(4) சோதனை (பரீட்சை):—"அவ்விலக்கியமாம் பொருளிற் செறி வுறுமவ் விலக்கண முண்டோ விலேயோ வென்னத்தெரிந்திடுதல் பரிட்சை." இலக்கியமாகவுள்ள பொருளினிடத்து அதாவது முதலில் பெயரளவிற் கூறிய பொருளினிடத்து பின்னர்க் கூறிய இலக்கணம் உண்டோ இல் லேயோ? என்று ஆராய்தல் பரீட்சையாம். இலக்கியமாகிய பிரஹ்மத்தில் சச்சிதானந்தமாகிய இலக்கணம் இருக்கின்றதா இல்லேயா? என்று ஆராய் தல் இங்குப் பரீட்சையாம்.

---

# திருமுருகாற்றுப்படை.

## ஒரு சிறு ஆராய்ச்சி யுரை.

(தமிழாசிரியர். பா. பக்கிரிசுவாமிச் செட்டியார்)

### பத்துப் பாட்டுக்கள்

பழந்தமிழ் நூல்களான பஞ்சகாவியங்கள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு முதலியவை தமிழகத்துக்கே உரிய ஒழுக்க முதலியவற்றை இனிது எடுத்துப் புலப்படுத்தும் சிறப்பினையுடையவை. அவற்றுள் பத்துப் பாட்டுக்கள் மலை, நாடு, நகர் முதலியவற்றை அழகுபெறக் கூறியும், பண்டைக்காலத் திருந்த சில தமிழ் நாட்டரசர்களின் வரலாறுகளையும், அக்காலத்து மக்களுடைய நாகரிகத்தையும் வெளிப்படுத்தியும் விளங்குகின்றன. பிற்காலத்து ஆசிரியர் பலரும் இந்நூல்களின் பொருளை யன்றிச் சொற்றொடர்களையும் தத்தம் புத்தகங்களில் எடுத்தாண்டுள்ளனர். இத்தகைய பண்பு வாய்ந்த பத்துப்பாட்டு நூல்கள்,

'முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து'

என்னும் பழைய பாட்டின்கட் கண்டவாறு திருமுருகாற்றுப் படை, பொருநராற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்ற அருந்தமிழ்ப் பாட்டுக்கள் பத்தாகும். இவை,

'நூறடிச் சிறுமை நூற்றுப்பத் தளவே,
யேறிய வடியி னீரைம் பாட்டுத்
தொடுப்பதுபத்துப் பாட்டெனப்படுமே. அதுவே
அகவலில் வருமென வறைகுநர் புலவர்'

என்று பன்னிரு பாட்டியலில் கண்டவாறு இலக்கண முடையன.

### ஆற்றுப்படை

பத்துப் பாட்டுக்களில் முதன் நான்கு நூல்களும், மலைபடுகடாமும் ஆற்றுப்படை யென்ற முறையில் ஆக்கப்பட் டிருக்கின்றன. ஆற்றுப்படை யென்பது,

'புரவலன் பரிசுகொண்டு மீண்ட
விரவலன் வெயிறெறு மிருங்கா னத்திடை
வறுமையுடன் வரூஉம் புலவர் பாணர்
பொருநர் விறலியர் கூத்தர்க் கந்தப்
புரவல னூர் பெயர் கொடை பராஅ
யாங்குநீ செல்கென விடுப்பது' —பன்னிரு பாட்டியல்

அதாவது, உதவியை நாடும் ஒரு புலவனைக் கொடையிற் சிறந்தவனும், பிறர் துயரைத் தன் துயரென எண்ணி—நீக்கும் பெருந்தகையாளனுமான ஒரு மன்னனிடம் ஆற்றுப்படுத்தும் கவிஞர் ஒருவர், நடுவில் காணும் நாடு, நகரச் சிறப்புக்களைப் புகழ்ச்சியாகப்பேசி, அந்நாட்டை யாளும் அரசனுடைய ஆற்றலனைத்தையும் எடுத்துரைக்கும் வகையில் எழுதப்படுவ தாகும். பொதுவாக ஆற்றுப்படையானது வள்ளன்மை வாய்ந்த அரசனிட மிருந்து பரிசுகள் பல பெற்றுவந்த ஒரு கவி, அத்தகைய மன்னனைத் தேடும் மற்றொரு புலவருக்கு அவ்வேந்தனது அரிய தரும குணங்களை எடுத்துக் கூறுவதுபோல இயற்றப்படுவது. முக்கியமாய் பத்துப் பாட்டிலுள்ள ஆற்றுப்படை நூல்களனைத்தும் மேற்கண்ட விவரத்தையே கொண்டு எழுதப்பட் டிருக்கின்றன. ஆனால் போர்க் கடவுளான முருகனைப்பற்றிப் புகழ்ந்து பேசும் திருமுருகாற்றுப்படை எனும் பத்துப்பாட்டின் முதனூல் அவ்வாறு அருளப்படவில்லை.

## திருமுருகாற்றுப் படையின் பெருமை

'மற்ற ஆற்றுப்படை நூல்களெல்லாம் மக்களிடத்து ஆற்றுப்படுப்பன. திருமுருகாற்றுப்படை கடவுள்பால் ஆற்றுப்படுவது' 'வீடுபெறுதற்குச் சமைந்த ஓர் இரவலனை வீடுபெற்றா னொருவன் முருகக் கடவுளிடத்தே ஆற்றுப்படுத்தியதாக உள்ளது. ஏனைய ஆற்றுப்படை யெல்லாம் பரிசில்பெறற் குரியாரைக் கிளந்தெடுத்து 'பொருநராற்றுப்படை' முதலிய பெயரானே வழங்குகின்றன. திருமுரு காற்றுப்படை பரிசி லளித்தற் குரியார் பெயர்கூறி 'முருகாற்றுப் படை' என வேழாம்வேற்றுமை யாகவும், 'திரு' என்னும் அடை புணர்ந்தும் வழங்குகின்றது. பிறஆற்றுப்படைகட்குப் பொருளாயினர் ஒரோருகாலத்தே விளங்கி மறைந்தா ராகலின், அப்பாட்டுக்களின் முக்கியப் பொருளோடு ஏனைய காலத் திரவலர்க்குச் சிறிதும் இயைபில்லை. திருமுருகாற்றுப் படைக்குப் பொருளாயினோர், நித்த ராகலின் இதன் முக்கியப் பொருளொடு எக்காலத்தும் எவ்வெவர்க்கும் தொடர் புண்டு.' இன்னோரன்ன பல சிறப்புக்கள் நோக்கியே திருமுருகாற்றுப்படை பத்துப் பாட்டுக்களில் முன்னதாக வைத்துப் பொன்னேபோல் போற்றப்படுகின்றது. பதினோராந் திருமுறைத் தொகுப்பிலும் சேர்ந்துளது.

## நூல் வந்தவாறு

திருமுருகாற்றுப்படை ஆண்டவன் முருக பிரானுடைய அருங் குணாதிசயங்களையும், வீர பராக்கிரமங்களையும், அருள் விசேடங்களையும், அவரிருத்தற்குரிய திருத் தலங்களையும் எடுத் துரைக்கின்றது. சாதாரணமாக ஜனங்களுக்கு, தமிழர்களுக்கு அதிகமாகத் தெரிந்திருக்கும் அரிய நூலும், ஆதிபாராயண நூலாக அமையப் பெற்றிருப்பதும் திருமுருகாற்றுப் படையே யாகும். இச் சிறந்த பனுவலைச் செய்தவர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்பார். நல்லிசைப் புலவர் நக்கீரர், அங்கயற்

கண்ணி பங்கரான சோமசுந்தரக் கடவுள் அறுபத்துநான்கு திருவிளையாடல் செய்த திருக்கூடல் என்னும் மதுரையம் பதியில், கடைச்சங்கம் இருந்த காலத்து அச்சங்கத் தலைவராய்ப் புலவர்கட்குத் தலைமையுற்றுப் புகழ்பெற்று இருந்தவர். ஆலவாய் அவிர்சடைக் கடவுள் தம்மடியவர் தருமிக்காக அருளிய 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற அரிய பாசுரத்திற்குக் குற்றங்கூறிய பெரியவர். இப்புலவர் பெருந்தகை திருமுருகாற்றுப்படையைத் திருவாய் மலர்ந்ததற்குக் காரணமாய், பூதமொன்று ஆயிரம் பேர்களை ஒரே சமயத்தில் அருந்த வேண்டுமென்னும் ஆசை யுடையதாய் தொள்ளாயிரத்துத் தொண்ணூற் றொன்பதின்மரைச் சேர்த்து ஒருவருக்காகக் காத்திருந்த காலத்தில், ஆங்கு நக்கீரர் தற்செயலாய் வரக்கண்ட பூதம், அவரையும் பிடித்து சிறையிலிட்டுத் தன் நித்திய கடன்களை முடித்து வந்து ஆவலை யகற்றிக் கொள்ளலாமென்று வெளியே சென்றதாகவும், அதுசமயம் பேராபத்தி லகப்பட்ட நக்கீரர் இந்நூலைப்பாடி முருகப்பெருமானை வேண்ட, அந்நொடியே வடிவேல் தரித்த வரதன் ஆண்டு தோன்றி அக்கொடிய பூதத்தைக் கொன்று நக்கீர ருள்ளிட்ட ஆயிரவரையும் விடுவித்ததாகவும் ஒரு விநோதக்கதை வழங்குகின்றது. இவ்வரலாற்றின் விரிவு சீகாளத்தி புராணத்துள்ள நக்கீரச் சருக்கத்தால் விளங்கும். ஆனால் இச்சரிதம் திருப்பரங்கிரிப் புராணம், நக்கீரச் சருக்கத்தில் சில வேறு பாடுகளுடன் காணப்படுகின்றது. எவ்வாறு இருப்பினும் நக்கீரர் தமக்கு மகத்தான ஆபத்து நிகழ்ந்த பொழுது இதனைப்பாடி அவ் விபத்தி லிருந்து விடுபட்டாரென வெளிப்படுவதால் திருமுருகாற்றுப்படை யென்னும் தெய்வப் பனுவலை அனுதினமும் அன்போடு பாராயணம் பண்ணுவோர்க்கு ஆண்டவன் ஆறுமுகப் பெருமான் திருவருள் புரிவா னென்பது ஆன்றோர் துணிபு. இதனை,

'நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற்றுப் படையை
தக்கோலம் நாள்தோறும் சாற்றினால் முக்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளி
தானினைத்த வெல்லாம் தரும்'

என்ற திருவாக்கான் உணர்க.

இத்தகைய அருமைகளனைத்தும் ஒருங்கே அமையப் பெற்ற திருமுருகாற்றுப்படை முந்நூற்றுப் பதினேழு அடிகளையுடையது; ஆறு பிரிவினதாக அமைந்துள்ளது.

## திருப்பரங்குன்றம்

முதற் பிரிவின் ஆரம்பத்தில், மக்களை நோக்கி 'நீங்கள் இவ்வுலக இன்பங்களை வெறுத்து, எக்காலும் ஆண்டவன் திருவடியிலே கலந்து இருக்க விரும்பினால் சிறந்த வேலாயுதத்தை யுடையவரும், என்றும் இளமைப்பருவம் வாய்ந்தவருமான ஸ்ரீ முருகக்கடவுளை வழிபடுக. அவர் திருவுளமகிழ்ந்து, எழுந்தருளியுள்ள திருத்தலங்கள் இவை' யென எடுத்துரைக்கப்

பட்டிருக்கின்றது. முதன் முதலாகத் திருப்பரங்குன்றத்தைப் பற்றிக் கூறப்பட்டுளது. இக்குன்று தற்கால மதுரைக்குத் தென் மேற்கி லிருக்கிறது. ஆனால் திருமுருகாற்றுப்படையில் திருப்பரங்குன்றம் மதுரைக்கு மேற்கில் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. முதலில் மதுரையைப் பற்றிக் கூறப் புகுந்து, அதன் பண்டையச் சிறப்பைப் 'போருக்கு வருகின்றவரை வரலாம் என்று கூவி யழைக்கும் குறிப்பைக் காட்டா நிற்கும் கொடிகளின் பக்கத்தில் கட்டிய பந்தும் பாவையும் தொங்கிக்கொண் டிருத்தலால், போர் செய்வார் இல்லையென்று விளங்கும் கோயில் வாயில்களையும், இலக்குமி வீற்றிருந்த—குற்றம் தீர்ந்த கடை வீதிகளையும், மாட மாளிகைகளும், கூட கோபுரங்களுமுள்ள தெருக்களையு முடைய மதுரைமா நகர்' என அறிவிக்கப் பட்டிருக்கின்றது. இதிலிருந்து அக்காலத்து அரசர்கள் பகைவரை மகளிராக்கி அவர் கொண்டு விளையாடுதற் குறிப்பாகத் தம் கொடிக்கருகே பந்தும் பாவையும் தூங்க விடுதலாகிய வழக்கங் கொண்டிருந்தனர் என்பது அறியக் கிடக்கின்றது. இன்னும் இப்பாகத்தில் வரை யுறையும் சூரரமகளிர் விளையாட்டும், பேய்மகள் துணங்கை யாடலும் வருணிக்கப்பட்டுள்ளன.

## திருச்சீரலைவாய்

இரண்டாவதாகக் கூறியுள்ள க்ஷேத்திரம் திருச்சீரலைவாய். இப்பொழுது திருச்செந்தூர் யென வழங்குவது. இது திருநெல்வேலிக்கு 37 மைலில் உள்ள கடற்கரை ஸ்தலம். இங்கு முருகப்பெருமான் ஆறுமுகங்களும் பன்னிரண்டு கைகளுமுடையவராய் விளங்குவது கூறப்பட்டுள்ளது. மேலும் ஆண்டவனின் ஆறு திருமுகங்களும் தனித்தனி புரியும் தொழில்களும், அவற்றுள் ஒவ்வொரு முகத்திற்கும் இவ்விரண்டு கைகள் இனமாகப் பன்னிரண்டு திருக்கரங்களும் அருளும் கருமங்களும் இதிற் கூறி யிருப்பது கற்றுணர்ந்து இன்புறத்தக்கது.

## திரு ஆவினன் குடி

மூன்றாவதெனச் சொல்லப்பட்டது திரு ஆவினன் குடி (திரு-இலக்குமி, ஆ-காமதேனு, இனன்-சூரியன், கு-பூமி, டி-இந்திரன் இவர்கள் பூசித்த பழநி யடிவாரம்) என்ற திருத்தலம். பழநிமலை யென அழைக்கப்படுவது இது தான். சித்தன் வாழ்வு என்றும் இதற்கொரு பெயருண்டு. திண்டுக்கல்லுக் கப்பால் மேற்கில் 36 மைலில் இருக்கின்றது. நான்முகனை முன்போல் சிருட்டித் தொழிலில் நிலை நிறுத்த நினைத்து, 'திருமாலும், சிவனும், நான்முகனும், தேவர் முப்பத்துமூவரும், திசைக்காப்பாளர் எண்மரும், ஏனை அமரரும், அவுணரும்' ஒருங்கு வந்து தெய்வயானை யம்மையோடு வீற்றிருக்கும் முருகப் பெருமானைக் கண்டதாகக் கூறப்பட்டிருக்கின்றது. முனிவரியல்பும் இப்பகுதியில் அழகாக விவரிக்கப் பட்டுளது.

## திருவேரகம்

அடுத்த ஸ்தலம் திருவேரகம். 'ஏரகம்-மலை நாட்டகத் தொரு திருப்பதி' என்பர் நச்சினார்க்கினியர். ஆனால் பிற்காலத்துப் பெரியார் பலரும் கும்பகோணத்திற் கடுத்த சுவாமி மலையை ஏரகம் என்று பாடியுள்ளனர். திருவேரகத்தில் சிறந்த அடியார்கள் இருந்ததாகத் தெரிகின்றது. இப்பாகத்தில் இரு பிறப்பாளர்க்குரிய கற்றல், கேட்டல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறுகடன்களையும், காருகபத்தியம், ஆகவனீயம், தென்றிசையங்கி என்ற முத் தீயினையும் விளக்கி, அவர்கள் செய்யவேண்டிய நித்திய கருமங்களையும் விவரித்திருக்கின்றது. அவர்கள் நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங் காத்த விவரமும் கூறப்பட்டிருக்கின்றது.

## குன்று தோறாடல்

ஐந்தாவது குன்று தோறாடல் என்பது. குன்று தோறாடல் என்பது நிலவரமாக ஒரு இடத்தைக் குறிப்பதல்ல. மலைதோறுஞ் சென்று விளையாடல் என்பதே அதற்குப் பொருள். நச்சினார்க்கினியரும் இப்பொருளே வரைகின்றார். தணிகை, விராலிமலை, வள்ளிமலை, கழுகுமலை, குன்றக்குடி முதலிய குன்றுகளை உடன் எண்ணவேண்டி 'குன்று தோறாடல்' என்று கூறியிருக்கலாம். இதில் குறிஞ்சி நிலமக்களின் நடை, யுடை, பாவனை முதலியவை குறிக்கப்படுகின்றன.

## பழமுதிர் சோலை

பழமுதிர் சோலை யென்னும் ஸ்தலம் தான் திருமுருகாற்றுப்படையில் கடைசியாக எடுத்தாளப்பட்டிருப்பது. இந்த ஸ்தலம் மதுரைக்கு வடகிழக்கில் 12-வது மைலில் இருக்கின்றது. இப்பிரிவில் இக்காலத்தும் மறையாத சில பழக்க வழக்கங்கள் அழகாகச் சொல்லப்பட் டிருக்கின்றன. அடியாரது மனப் பாங்குக்குத் தகுந்த வண்ணம் அவரவரது தெய்வத் தன்மையோடு முருகன், திருவுரு காட்டுவாரென்றும், அவ்வாறு அழகன் தோன்று மிடங்கள் நாற்சந்தி, முச்சந்தி, பெரிய மரத்தடி, சபைகூடும் அம்பலம், ஆத்தீண்டு குற்றியை யுடைய இடம் முதலியன வென்றும் கூறப்பட்டுளது. பண்டையில் மக்கள் குமரக் கடவுளை வழிபட்ட விதமும், அவர்களளித்த நைவேதனம் முதலிய விவரமும், அவர்கள் பிரார்த்தனை வரலாறும் இதனால் தெளிவாகத் தெரிகின்றது. இன்னும் இதன் கண் அருவி வீழ்ச்சி கூறியுள்ளது இயற்கை நவிற்சியாக மகிழ்ச்சி அளிப்பதாகும். இப்பாட்டின் புறத்தே சில வெண்பாக்கள் உள்ளன. அவை பழைய ஏட்டுப் பிரதிகளில் இல்லை என்பர்.

இனி, இத்தகைய இயற்கை அழகும், இனிய தமிழும் பழைய தமிழர் பழக்க வழக்கங்களும் அறிவதற்குக் கருவியாக உள்ளத் திரு முருகாற்றுப்படையைத் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் வாங்கி வாசித்துணர வேண்டுவது இன்றி யமையாததென்று வேண்டிக் கொள்ளுகிறேன்.

# ஆனந்த சந்திரோதயம்

தமிழாசிரியர் S. V. வரதராஜையங்கார்.

"வளர்த்த கடா மார்பிலே பாயும்" என்று சொல்ல நாம் அடிக்கடி கேட்கின்றோம். ஒருவன் செய்த நன்றியை மறந்து அவனுக்கே கேடு விளைக்க முற்படுகிறவனை இவ்வாறு சொல்வது வழக்கம். இதை விளக்கக் கர்ண பரம்பரையான ஓர் கதை யுண்டு. அதாவது ஔவை ஒரு சமயம் பிராமணர்கள் வசிக்கும் ஒரு அக்ரஹாரத்தின் வழியே சென்றுகொண்டிருந்தாள். அப்பொழுது நடுப்பகல்; மேலும் கோடைகாலம். வெயிலின் தாபத்தைவிடப் பசியின் தாபத்தால் ஔவை மிகவும் வருந்தினள். எவ்வளவு படித்து எத்தனைப் பட்டங்கள் வாங்கினாலும், லக்ஷ்மி கடாக்ஷம் சிறிதேனும் இல்லாவிட்டால் யாரும் உலகில் சோபிக்க முடிகிறதில்லை. இன்று தமிழ் மக்களனைவரும் தலையால் வணங்கும் தகைமை சான்ற புலவரான கம்பர், அக்காலத்தில் பசியால் பட்டபாடு பதினாயிரமல்லவா? கம்பருடைய கவித்திறமென்ன? தமிழ்ப் புலமையின் உயர்வென்ன? அவர், வேலி என்பவள் தருவதாக வாக்களித்த ஒருபடி நெல்லுக்காக மண்வெட்டி யெடுத்துப் பிசைந்து சுவர் வைத்து வருந்தவும் நேரிட்டதன்றோ? அதுபோல ஔவை கூழுக்குப் பாடி குக்ஷியை நிரப்பவேண்டி யிருந்தது. மூதாட்டி ஏதாவது உண்ணக் கேட்கலாமென்று ஒவ்வொரு வீடாகப் பார்த்துக்கொண்டே சென்றாள். எந்த வாயிற்படியையும் ஏறி மிதிக்க அவளுடைய கால்கள் இசையவில்லை. இங்ஙனம், பல வீடுகளைக் கடந்து செல்லும்பொழுது, ஒரு வீட்டின் வாசலில் மாவிலைத் தோரணம் கட்டி யிருப்பதையும், உள்ளே சில அந்தணர்கள் கூடி 'சுவாஹா' என்று கோஷித்து அக்னி வளர்த்து ஹோமம் செய்துகொண் டிருப்பதையும் கண்ணுற்றாள். மாவிலைத் தோரணத்தைப் பார்த்ததும், ஔவை இவ்வீட்டில் ஏதோ சுபச்சடங்கு நடைபெறுகின்றதென்று அநுமானித்து, தனக்கு ஏதாவது கிடைக்குமென்று அவ்வீட்டின் வாசலிற் போய் நின்றுகொண் டிருந்தாள். கதவு தாழிடப்பட்டிருந்தது. யாராவது வெளியில் வருவார்கள் என்று காத்திருந்தாள். கொஞ்ச நேரமானதும், மெல்ல கண்களைப் பிசைந்த வண்ணம் ஒருவர் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தார். வந்தவர் அந்த ஹோமத்தில் சம்பந்தப்பட்டவரென்பதை மூதாட்டி அறிந்துகொண்டதுமன்றி, வாசலுக்கு நேராக உள்ளே சுவாலையுடன் எரிந்துகொண்டிருக்கும் தீயையும் பார்த்தாள். வெளியில் வந்த வேதியன் ஔவையைப் பார்த்து "ஏ! கிழவி! இங்கென்ன வேலை உனக்கு? நில்லாதே! போ! போ! இங்கு ஹோமம் நடக்கிறது" என்றான். ஔவை தனக்குச் சிறிது அன்னமளிக்கும்படி எவ்வளவு மன்றாடிக் கேட்டும், அப்பிராமணன் விரட்ட ஆரம்பித்தானே அன்றி, மரியாதையாகக் கூடப் பேசவில்லை. இவர்கள் செயலை வியந்த அன்னை "உம்! வளர்த்தகடா மார்பிலே பாயும்" என்று சொல்லிவிட்டுப் படி இறங்கினள். அந்தச் சமயம் உள்ளே யிருந்து இன்னும் இரண்டொருவர் வெளியில் வந்தார்கள். அவர்

கள் " இவள் யார்? என்னவோ சொன்னளே! அது என்ன?' என்று கேட்டார்கள். "அந்தக்கிழம் என்னவோ 'வளர்த்தகடா மார்பிலே பாயும்' என்று சொல்லிக்கொண்டே போகிறது" என்றான் அந்தப் பிராமணன். உள்ளிருந்து வந்தவர்களில் ஒருவன் சிறிது குணக்கியன். அவன் இதில் ஏதாவது விசேஷமான பொருள் இருக்க வேண்டும் என்று ஊகித்து, "அந்தக் கிழவி யாரோ தெரியவில்லை; அவளைக் கூப்பிடு" என்றான். ஒருவர் கூப்பிட ஔவை திரும்பி வந்தாள். "நற்றோர் வாக்கு வீண் போகாது, நாம் ஏதோ ஒரு பழமொழியைப் பசிக்கொடுமையால் வெளியிட்டோம். அது உடனே பயனளித்து விட்டது." என்று அவள் உள்ளம் களித்து விரைந்து வந்ததும், அழைத்தவன் " கிழவி நீ சொல்லிவிட்டுப் போனதன் பொருளென்ன?" என்று கேட்டான். இதற்குள் அங்கு பத்துப் பதினைந்துபேர் கூடி விட்டார்கள். உள்ளே இருந்தவர்களும் வாசலுக்கு வந்தார்கள். ஔவை ஒரு அருமையான சிறு பிரசங்கம் செய்தாள். "வேதியர்களே! என்னை எல்லோரும் ஔவை என்று அழைப்பார்கள். யாகம், ஹோமம் முதலியவை சுகாதார விதியை அனுசரித்துச் செய்யப்படுகின்றன. நீங்கள் 'சமித்து' என்று சொல்லும் அரசின் குச்சிக்குச் சில உயர்ந்த குணங்கள் இருக்கின்றன. அரச மரத்தின் அடியில் சில நிமிஷநேரம் இருந்து, அந்தக் காற்றைச் சுவாசிப்பதாலேயே தேகத்திலுள்ள பல வியாதிகள் நீங்குகின்றன. இக்காரணம் பற்றியே ஸ்திரீகள் அரசமரத்தைச் சில விசேஷ தினங்களில் சுற்றுகிறார்கள். இப்பொழுது நீங்கள் இயற்றும் 'ஹோமம்,' 'அரசப்பிரதக்ஷிணம்' முதலிய வற்றையெல்லாம் நீங்கள் பிராமண கர்மாவென்று சொல்லுவீர்கள். அது உண்மையே. மனிதன் இகத்திலோ பரத்திலோ சிலவற்றை விரும்பி மேன்மையை யடைய முற்பட்டுச் செய்வதே கர்மா வாகும். அதைத்தான் 'கடமை' என்றும் கூறுவார்கள். அக் கர்மா வானது, காம்ய கர்ம மென்றும், நிஷ்காம்ய கர்ம மென்றும் இரண்டு விதப்படும். காம்யமாவது பலனை எதிர் பார்த்துச் செய்யப்படுவது, நிஷ்காம்ய மானது எவ்வித பிரயோஜனமும் எதிர் பாராமல் செய்யப்படுவது. அநேகமாக கிருகஸ்தர்கள் எல்லோரும் காம்ய கர்மிகளே. முற்றத்துறந்த முனிபுங்கவர்களே நிஷ்காம்ய கர்மிகளாவார்கள். அவர்கள், முக்தியைத் தவிர வேறு எதையும் இச்சிக்கமாட்டார்கள். தெருக்களின் மூலைகள் தோறும் பிள்ளையார் கோயில்களோ அல்லது வேறு எந்தக் கோயில்களோ இருக்கின்றன. அவற்றை விசேஷ பக்தியுடன் வழிபடாமல் மக்கள் ஏன் ஏராளமாகப் பொருளைச் செலவுசெய்து கொண்டு "சிதம்பரத்தில் ஆருத்ரா தரிசனம்! ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசி!" என்று பனி, குளிர் இவற்றால் கஷ்டப்பட்டுக் கொண்டு யாத்திரை செய்கிறார்கள்? பலவிதமான அலங்காரங்கள் அவர்கள் மனதை இழுப்பதால் தானே? அதுபோல கர்மாக்கள் யாவும் காம்ய மென்னும் பலனை எதிர்பார்த்தே செய்யப்படுகின்றன. அங்ஙனம் கர்மாவால் மனிதன் அடையக் கருதும் பிரயோஜனம் உத்தம, மத்திம அதமமென்று மூன்று விதமாக விருக்கும். சத்வம், ராஜஸம், தாமஸ மாகிய மூன்று வித குணங்களையும் அக்காம்யம் தன்னிடம் கொண்டது.



" அரசமரத்தைச் சுற்றியதும் அடிவயிற்றைத் தடவிப் பார்த்தாளாம்" என்றொரு பழமொழி யுண்டு. இதைக் கொண்டே ஒவ்வொரு மனிதனும்

தான் இயற்றும் கடமைகளின் பலனிடத்தில் எவ்வளவு கண்ணுங்கருத்துமாயிருக்கின்றானென்பது நன்கு விளங்கும். ஆகவே, கர்மா ஒரு மனிதனுக்குத் தான் முற்பட்ட காரியத்தில் உறுதியாக நிற்கவும், நன்னெறியினின்றும் வழுவாதிருக்கவும், ஆத்மார்த்த ஆவலை விருத்தி செய்யவும் பழக்கத்தை ஊட்டுகின்றது. ஆனால், 'அன்பு', 'ஜீவதயை' 'இரக்கம்' 'தன்னைப்போலப் பிறரைக் கருதி நிற்றல்' ஆகிய இவைதான் ஒருவனைப் பகவானுக்குச் சமீபத்தில் கொண்டு போய்ச் சேர்க்கின்றன. எவ்வளவு யாக, யக்ஞ, ஹோமங்களைச் செய்தாலும், யோகங்களை அப்யசித்தாலும், தானும் தன்னைச் சேர்ந்தவர்களுமே உண்டு களிக்க வேண்டுமென்று கருதுகின்றவனுக்கு இகபர சுகம் நிச்சயமாக இல்லை. "அன்பு எவனிடத்தில் வற்றிப் போயிருக்கிறதோ அவனுக்கும் இறைவனுக்கும் மத்தியில் அக்னியாறு பிரவாகமெடுத்து ஓடும்." சில மூடர்கள்,—கிணற்றுத் தவளைகள் ஸ்ரீரங்கம் வைகுண்ட ஏகாதசி விழாவில், அங்குள்ள சுவர்க்கப்படியில் உட்கார்ந்திருப்பவர்களுக்குக் கொடுக்கப்படும் தானமே சிறந்ததென்று கருதுவார்கள். மகா லோபிகளாயிருப்பவர்கள் கூட, ஸ்தல புராணம் கூறும் கூற்றுக்காக வருஷத்திற்கு ஒருநாள் இதற்காகத் தம்பிடி மாற்றி வைத்துக்கொண்டிருந்து அந்த ஸ்தலங்களில் கொண்டு போய் உதிர்த்து விட்டு வருவார்கள். மற்ற நாட்களிலோ இடங்களிலோ அவர்கள் பைசாவும் தர்மத்தின் பேரால் செலவிடமாட்டார்கள். இது மாதிரியே நமது உயர்ந்த தர்மங்கள் யாவும் தப்பாகக் கருதப்பட்டு பிறர் பரிகசிக்கும் நிலைக்கு வந்து விட்டன. மனமிளகி, நேருக்கு நேராக வருந்தும் ஒருவனுக்குச் செய்வதே சிறந்த தர்மமாகும். அதுதான் நிச்சயமாகப் பலனளிக்கும். யாராயிருப்பினும் 'பசி' என்பதை ஒருவன் முகக்குறி காட்டுமானாலும், அல்லது வாய்திறந்து கேட்டு விட்டாலும் அவனுக்கு உடனே தன்னால் இயன்றதைச் செய்வது மனிதனின் முக்கிய கடமை. உண்டி கொடுத்தவர் உயிர் கொடுத்தோராவார். அதனால் தான் பாரத தர்ம நூல்களில் உண்டியில்லாத உயர்ந்த காரியம் எதும் காணப்படுகிறதில்லை. பகவானுக்கு முன் ஜாதிபேதமென்பதே இல்லை. இதையேனும் வைதிகர்கள் ஒப்புக்கொள்வார்கள். அதுபோல, பசிக்கும் ஜாதிபேதமில்லை. பசியால் உடலுயிர் ஆகிய இரண்டும் துன்பத்தை யடைகின்றன. பிராமணனுக்கும், பரம சண்டாளனென்பவனுக்கும் பசி ஒரேவித வருத்தத்தைத் தருகின்றது. இந்தப் பசியென்னும் அனைத்திற்கும் முதலில் நிற்கும் இயற்கை நோயின் தன்மையை வருணத்தால் முதலில் நிற்கும் தாங்கள் உணரவேண்டும். அதற்கு உங்களுக்கு ஒரு சாக்ஷியமும் தருகிறேன்.



"'திருவிசைநல்லூர் ஸ்ரீதர ஐயாவாள்' என்பவர் ஒரு பெரிய மகான். அவர் வேதவிற்பனர்; மிக்க சீலர்; பகவந்நாம சாம்ராஜ்யர். அவர் தமது பிதாவுக்குச் சிரார்த்தம் செய்யும் தினம்வந்தது. அன்று அவர் முறைப்படி அனைத்தையும் இயற்றி இலைகளில் சகல உண் பண்டங்களையும் நிரப்பி, பிராம்மணர்களை உட்கார வைத்து மந்திர பூர்வமாகத் தத்தம் செய்யுந் தருவாயில், தெருவில் ஒரு பறையன் நேரே நின்று கொண்டு "பசி உயிர்போகிறது" என்று உரக்கக் கத்தினான். இந்த வார்த்தைகள் காதில் பட்டதும், ஐயா அவர்கள் அந்த பிராம்மணர்களுக்குப் பக்கத்தில் ஒரு இலை போட்டு நிமிஷத்தில் பரி

மாறி, அவனை மரியாதையோடு அழைத்து அமர்த்தினர். உடனே கலகம் உண்டாய் விட்டது. ஏகமாக பிராம்மணர்கள் கூட்டம் கூடி விட்டார்கள். ஐயாவாளுக்கு முதுகு வீங்கிப் போய்விடும்போ லிருக்கிறது. அந்தப் பறையனை பலர் சூழ்ந்து கொண்டு பலவாறு நிந்தித்து அடிக்க யத்தனிக்க ஐயாவாள், கதறிக்கொண்டே "அந்தப் பசித்த நாராயணனை ஒன்றும் செய்யாதீர்கள். என்னை அதற்கு பதிலாக நையப்புடையுங்கள்" என்று அலறுகிறார். மறைகளும் தேடிக்காணு அப்பறையன் இவர்கள் கைக்கு அகப்பட்டவனு! மறைந்தான் நொடியில். கையும் பிடியுமாய் பிடித்திருக்கும் பறையன் மறைந்த மாயத்தைக் கண்ட வைதீகர்களுக்கு மயிர்க் கூச்சலுண்டாயிற்று. தங்கள் தவறான செய்கையை உணர்ந்து நடுநடுங்கி ஐயாவாள் காலிலே விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டு சென்றார்கள். இந்த விஷயம் அவ்வூரில் அந்த ஸ்ரீதர மகானுடைய சமாதியில் குருபூஜை கொண்டாடுகிறவர்களால் எடுத்துரைக்கப் படுகிறது. ஆனால் இதனை உணர்ந்து அவர்கள் நடப்பது இன்னும் எவ்வளவோ நன்மையைத் தரும்.

***

இனி, நீங்கள் கேட்டதற்கு விடை கூறுகின்றேன். நீங்கள் இந்த அக்நியை வளர்க்கிறீர்கள். படிக்கணக்காக நெய்யை அதில் ஊற்றுகிறீர்கள். இந்த அக்நி ஏதாவது மரணாந்த காலத்தில் உங்களிடம் கருணை காட்டப் போகின்றதா? உங்கள் மார்பிலே வந்து உட்கார்ந்து உங்களை எரிக்கப் போகின்றது. நான் ஒரு ஸ்திரீ; நான்காவது வருணத்தவள் ஆதலால் நீங்கள் வளர்க்கின்ற அக்நியைச் சொல்லாமல், அந்த தீக்கடவுளின் வாஹனமான ஆட்டுக்கடாவை வைத்து "வளர்த்த கடா மார்பிலே பாயும்" என்று மறைத்துக் கூறினேன். இந்த அக்நியைப் பார்த்ததும் எனக்கு ஒரு விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. வருவதை எதிர் பாராமலும், தாம் செய்கின்ற உதவியின் பாத்திரம் சரியானதுதானு என்பதை ஆழ்ந்து யோசிக்காமலும் மனிதர்கள் கருமங்களைச் செய்கிறார்கள். பசி என்பவருக்கு உணவு கொடுத்தால் ஆத்ம சாந்தி ஏற்படும் என்கிறார்களே! இவ்வளவு வேதாத்யயனம் செய்திருந்தும், இந்த அக்நியை—கர்மா செய்யும் பொருட்டு வளர்க்கும் இவர்களுக்கு நல்ல பசிக்குச் சிறிது உணவளிப்பது எவ்வளவு சிறந்த தர்மமாகும்? 'ஜீவதயை' என்பதை அவ்வேதங்கள் கூறவில்லையா? 'ஐயமிட்டுண்' என்று அந்த மறைகள் ஓதவில்லையா? என்று இப்படிப் பலவாறு எண்ணிக் கொண்டே சென்றேன். அந்தச் சமயம் என் வாயில் ஏதோ 'வளர்த்தகடா மார்பிலே பாயும்' என்று எழுந்தது." என்று கூறினள். ஒளவையின் இவ்வரிய சிறு பிரசங்கத்தால், உண்மையான தானம் தருமம் என்பன எவை? சற்பாத்திரம் என்பது பிராம்மணன் தானு வென்பதையும் அவ்வந்தணர்கள் உணர்ந்து, ஒளவையை உபசரித்து உணவளித்தார்கள்.

---

குறிப்பு:—"வளர்த்த கடா மார்பிலே பாயும்" என்பதற்கு வியாக்கியானமாக ஸ்ரீமான் ஐயங்காரவர்கள் விரித்த கதை வரலாறுகள் அவருடைய சொந்தக் கற்பனை என்று நினைக்கிறோம். அவற்றிற்கு ஆதாவு தமிழ் நூல்களில் இருப்பதாகத் தெரியவில்லை. பணர்.

# சொல்வகை ஓர்தல்

(டர்பன், சரஸ்வதி சபைத் தலைவர்
ஸ்ரீ. ச. முனிஸ்வாமி பிள்ளை எழுதியது.)

பொருளை நினைத்துணரும்படி அறிவிக்கும் ஆற்றலுடைய எழுத்தொலியே சொல் எனப்படும். ஆற்றலாவது சொல்லாகிய தனக்கும் பொருளுக்குமுள்ள தொடர்ச்சி. இச்சொல்லினால் இப்பொருள் அறியப்படும் என்னும் இறைவனியமமே ஆற்றல் என்பாருமுளர். ஆற்றல், வலி, சக்தி என்பன ஒருபொருட் கிளவிகள். ஆற்றலில்லாதது சொல்லெனப் படமாட்டாது.

ஆற்றலும் முதியோர் வழக்கு, உபதேசம், நிகண்டு நூல், இலக்கண நூல் முதலியவற்றாற் கொள்ளப்படும். முதியோர் கூறியவாக்கியத்தைக் கேட்டு இளையோர் அறிந்து வழங்கும் முறைமை "புத்தகங் கொண்டுவா" என்று ஒரு முதியோன் கூறுங்கால் மற்றொருவனாற் புத்தகங் கொணரப் பட்டமையைப் பக்கத்தினின்ற இளையோன் கண்டு புத்தகங் கொணர்தலாகிய காரியம் இச் சொற்றொடராலே நிகழ்ந்தது என்றுணர்ந்து தானும் அவ்வாறு வழங்குவன். இவ்வாறுணர்ந்து வழங்குவதே முதியோர் வழக்காகும். உபதேசமாவது "இது பசு" "இது கன்று" என்பனபோலப் பொருள்களைச் சுட்டிக் காட்டிச் சொற்களைக் கூறி அறிவித்தல். நிகண்டு நூலாவது இன்ன இன்ன பொருள்களுக்கு இன்ன இன்ன சொற்களென்று சொற்பொருள்களை வரிசைப்பட அறிவிக்கும் நூல். இலக்கண நூலாவது பகுதி, விகுதி, முதலியவற்றின் பொருள்களை அறிவித்துச் சொற்களின் இயல்பினையும், பொருளினையும், துணிவிக்கும் நூல். இவற்றாலும் ஒப்புமை முதல்ய பிறவற்றாலும் ஆற்றல் கொள்ளப்படும்.

உலகம் வழங்கி வருவதற்குச் சொன்னிகழ்ச்சியே காரணம். எந்தக் காரியமுஞ் சொல்லினாலேயே நிகழ்கின்றது. கடவுளுடைய பிரமாணங்களாகிய விதிவிலக்குகளையும், பிறவற்றையுஞ் சொற்களே அறிவிக்கின்றன. பழையோர் சரித்திரங்களையுஞ் சொற்களே அறிவிக்கின்றன. மற்றும் செய்வன, தவிர்வன, வேண்டுவன முதலிய எல்லாவற்றையுஞ் சொற்களே அறிவிக்கின்றன. சொல்லென்னும் ஒளியில்லையாயின், அஞ்ஞானமாகிய இருள் பரந்து உலகந் தடுமாறும். ஒருவர் கருத்தை மற்றொருவர் அறிய மாட்டார். வேண்டும் பேறுகளைப் பெறுதலுங் கூடாது. இதனைச் சிறப்புடைய சொற்களைப் பிரயோகிக்குங்கால வழுப்பட வொட்டாது. ஆராய்ந்து கொள்ளுதல் யாவர்க்கும் ஆவசியகம். சொற்களைத் தொடுத்துப் பேசுவோரும், எழுதுவோரும், செய்யுள் செய்வோரும், தாம் எடுத்துக்கொண்ட சொற்களிலே தாம் கருதியபொருளை விளக்கும் ஆற்றல் உண்டோ? இன்றோ? என்பதனை ஆராய்ந்து தொடுத்தல் நன்றாகும். ஆற்றலில்லாதன கருதிய பொருளை விளக்க மாட்டா.

தமிழ்வாக்கியங்களிலே வருஞ் சொற்களெல்லாம் தமிழ்ச் சொற்களாய் வருதலே முறையாகும். முன்னோரால் வழங்கப்பட்டுப் பயின்று வந்த வட சொற்களும வேண்டுழி வழங்குதற் குரியனவாகும் வடசொற்கும் தமிழ்ச் சொற்கும் இயைபுமுண்டு. திருவள்ளுவர் குறள் முதலிய இலக்கியங்களிலே வருஞ் சொற்களெல்லாம் பெரும்பாலும் தமிழ்ச் சொற்களேயாம். அற்பமாய் வடசொற்களு முள. அவையும் பயின்று வந்தனவேயாம். திசைச் சொற்களைக்காண்ட லரிது. காலத்திலே இச்திசைச் சொற்களைத் தமிழ்ச் சொற்களோடு கலந்துஞ் சிலர் பிரயோகிக்கின்றனர். அது நன்றன்று.

பெயர், வினை, இடை, உரி என்னும் சொற்களுள்ளும், செஞ்சொல்லாயுள்ளவைகளே தக்கவாகும். செஞ்சொல்லாவது நேராற்றலினாலே தனக் குரிய பொருளை அறிவிக்குஞ் சொல். இதனை வடநூலார் வாசகம் என்பர். அது காரணச்சொல், இடுகுறிச் சொல், காரணவிடுகுறிச் சொல் என மூவகைப்படும். காரணச் சொல்லாவது பகுதி, விகுதி முதலிய உறுப்புக்களின் ஆற்றலாற் பொருளை விளக்குஞ் சொல். இடுகுறிச்சொல் உறுப்பாற்றலின் றிச் சமவாய வாற்றலாற் பொருளை விளக்குஞ் சொல். காரணவிடுகுறிச் சொல்லாவது உறுப்பாற்றலுடைய தாயினுஞ் சமவாய வாற்றலால் ஒரு பொருளையே அறிவிப்பது.

மற்றைய இலக்கணச் சொல்லும், குறிப்புச் சொல்லும் நேராற்றலாற் பொருளை உணர்த்த மாட்டா. இலக்கணச் சொல்லாவது, அதன்பாலுள்ள குறியினாலே இப்பொருளுடையது என்று அறியப்படுவது. அது வழக்கும், பயனும் பற்றிக் கொள்ளப்படும். வழக்காவது தொன்றுதொட்டு வழங்கி வந்த முறை. இதனாற் கொள்ளப்படுவது ஆகுபெயர் எனப்படும். பயனாற் கொள்ளப்படுவது விட்டவிலக்கணை விடாத விலக்கணை முதலியவாகப் பலவகைப்படும்.

குறிப்புச் சொல்லாவது குறிப்பாற் பொருள் பயக்குஞ்சொல். குறிப்பாவது கருதியறிவது. அது தனக்குரிய ஆற்றலாற் பிறப்பது, பொருட்குரிய ஆற்றலாற் பிறப்பது என இருவகைப்படும் கருதிய பொருளை நேரே விளக்காது, சார்பு, பகைமுதலியன பற்றி விளக்கலால, அவையுங் குறிப்புச் சொல் எனப்படும். சார்பு முதலியனவாவன:—சார்பு, வினை, இனம், இடம் என்பன. வடநூலார் இவற்றோடு பிரிவு, உடனிகழ்ச்சி, பகை, பயன், சமயம், காலம், பொருத்தம் முதலியவற்றையுங் கொள்வர்.

சொற்களை இன்னும் பலவகையாக வகுப்பாருமுளர். அவைகளை ஆங்காங்கு கண்டுகொள்க. வாக்கியங்களை எழுதுவோரும், செய்யுள் செய்வோருந் தாங்கள் எடுத்துக்கொண்ட சொற்களை எல்லாம் பரீட்சித்து நற் சொற்களைத் தெரிந்து பிரயோகித்தல் வேண்டும். வழூச்சொற்களையும், திசைச் சொற்களையும், இயைபில்லாச் சொற்களையும், திரிசொற்களையும், வழக்கில் லாச் சொற்களையும் பிரயோகிப்பாராயின், அவை சிறப்படையமாட்டா. பரிமேலழகர், சேனாவரையர், சிவஞான சுவாமிகள் முதலியோர்களுடைய வாக்கியங்களும், திருவள்ளுவர் கம்பர் முதலியோர்களுடைய செய்யுள் களுஞ் சிறந்து தோன்றுவதற்குக் காரணம் பெரும்பாலும் சொற்பிரயோக வனமையினால் என்றே கொள்ளுதும்.

பிற்கால வித்வான்களுள்ளே ஆறுமுகநாவலரவர்களுடைய பெரிய புராண வசனம், பாலபாடங்கள் முதலிய கத்திய ரூபங்களெல்லாம் யாவராலும் பாராட்டிக் கொள்ளப்பட்டதும் சொற்பிரயோக வன்மையினால் என்றே கொள்ளுதும். "வாசகம் வல்லார் முன்னே யாவர் வாய்திறக்க வல்லார்" என்று கம்பரும் கூறினார்.

இக்காலத்திலே சிலர் சிறுவர்களுக்குக் கற்பிக்கும் பாலபாடங்களைத் தானும் ஆங்கில நடையிலே எழுதி விடுகின்றார்கள். அந்நடை தமிழ் கற்கும் சிறுவர் மனத்திற் பதியுமாயின் பின்னர் திருத்தம் எப்படி வரும்? வாக்கிய நடை மாத்திரமோ சொற்களையும் பிழைப்படப் பிரயோகிக்கின்றார்கள்; கருப்பு என்பதற்குக் கறுத்த என்றும், பாவித்தல் என்பதற்கு வழங்குதல் என்றும், நிலவு என்பதற்குக் கிரஹணம் என்றும் பொருள் கூறுகின்றனர். இச் சொற்களிடத்திலே இப்பொருள்களை உணர்த்தும் ஆற்றல்கள் இல்லையே! சொற்களைப் பிரயோகிக்கும்போது இச்சொற்கும், இப்பொருட்கும், ஆற்றலுண்டா என்பதை ஆராய வேண்டாமா? ஆற்றலில்லாதன அசதியாடற் கிடனாகும்.

செய்யுள் செய்வோருக்கும், வாக்கியம் எழுதுவோருக்கும் சொற்களைப் பரீட்சித்துத் தக்கனவற்றை எடுத்துக்கொண்டு தகாதனவற்றை விலக்குதல் ஆவசியகமே யாகும்.

## நேயர்களுக்கு
# ஒரு வேண்டுகோள்.

———:(o):———

நமது "ஆனந்தபோதினி"யின் அநுபந்தம் பொங்கல் மலராகத் தை மாதம் முதல் தேதியில் வெளியிடப்படும் என்று அறிவித்திருந்தோம். நமது "ஆனந்தபோதினி" வாரப்பத்திரிகையின் இரண்டாவது ஆண்டு சமீபித்துவிட்டமையாலும், மிகுந்த சிறப்பியல்புகளுடன் அநுபந்தம் மிளிர்தல்வேண்டும் என்ற அவா பிறந்தமையாலும், நமது தமிழ் வருஷப்பிறப்பாகிய சித்திரை முதல் தேதியில் "ஆனந்தபோதினி" மாத, வாரப்பதிப்புகளுக்குப் பொருத்தமாக நல்லவிதமான அநுபந்தம் வெளிவருதல் எல்லாருக்கும் மகிழ்ச்சியைத் தரக்கூடும் என்ற எண்ணம் தோன்றியமையாலும் சித்திரை முதல் தேதியில் ஷை அநுபந்தம் தவறாமல் வெளியிடுவதாகத் தீர்மானித்திருக்கிறோம். அதுவரை தயவு கூர்ந்து பொறுத்துக் கொள்ளுமாறு நேயர்களை வேண்டிக் கொள்ளுகிறோம். [ப-ர்]

# தமிழ்மொழியின் பெருமை

—(o)—

(பேரா. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழியவே
ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி
இசை கொண்டு வாழியவே. (பாரதி)

தமிழர்க்குத் தங்கள் தாய்மொழியாகிய தமிழ் மொழியினிடம் அன்பு அதிகம். அவ்வன்பின் மிகுதியால் அவர்கள் தங்கள் தமிழ் மொழியே உலகத்திலுள்ள மொழிகளில் எல்லாம் உயர்ந்தது என்று ஆதிமுதல் இன்றுவரை பல்லாயிரக்கணக்கான வருஷங்களாகப் பகர்ந்து வருகின்றனர். தமிழ் மொழியின் சிறப்பிற்கு அவர்கள் கூறும் காரணங்கள் புராண சம்பந்தமானவை, சரித்திர சம்மதமானவை என இருவகைப் படும். புராண சம்பந்தமான புகழுரைகளுக்குப் பொருத்தமான பல ஆட்சேபங்கள் புகலக் கூடியதாயிருப்பதால் அப்புகழுரைகளை விடுத்துத் தமிழ் மொழியின் மேன்மையை ஸ்தாபிக்க வேறு காரணங்களைத் தேடவேண்டியது அவசியம். இவ்வுண்மையை ஒருவாறு உணர்ந்தமையினாலேயே இக்காலத்துத் தமிழர்—முக்கியமாகத் தமிழும் ஆங்கிலமும் ஒருங்கு கற்றுள்ள புலவர்கள் புராணக் காரணங்களை முற்றிலும் அறவே புறக்கணித்துத் தள்ளிவிடா விடினும் அவைகளோடு சரித்திர சம்மதமான பல காரணங்களையும் கூறுவதாயினர்.

## சரித்திரக் காரணங்கள்

புராணக் காரணங்களின் உண்மையையும் மறுக்கிறோம்; அதனால் ஒரு பாஷையின் மேன்மையை உறுதி செய்ய முடியாதென்றும் கூறுகிறோம். எந்த வஸ்துவின் அல்லது விஷயத்தின் ஏற்றமும் அதன் குணதோஷங்களைப்பற்றியதேயன்றி, அது யாரால் உண்டாக்கப்பட்டது அதனிடம் யாருக்கெல்லாம் அன்புண்டு, அதற்காக யார்யார் என்ன என்ன விதமான அரிய காரியங்கள் ஆற்றியுளர் என்னும் விஷயங்களைப் பற்றியதன்று. சாதாரணமாக ஜனங்கள் எவ்விஷய ஆராய்ச்சியிலும் பின்கண்ட காரணங்களையே பெரிதாகவும் உண்மை அளவு கோலாகவும் கருதி உபயோகிக்கின்றனர். ஆனால் அம்முறை முற்றிலும் பிசகானது. குணதோஷ ஆராய்ச்சி யொன்றே

விஷயத்தின் உண்மை யொளியைக் காட்டுவதாகும். சில சமயங்களில் முக்கியமாக உற்பத்தி, நட்பு, தியாகம் முதலிய விஷயங்கள் குணதோஷ ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்தரக் கூடியனவாக இருக்கலாம். ஆனால் அவைகளின் உபயோகம் அம்மட்டே என்பதை மறத்தல் ஆகாது.

இனி சரித்திரக் காரணங்களைக் கொண்டால், உண்மையான சரித்திர உணர்ச்சியோடு மட்டும் ஆராய்ந்து விட்டால், அவைகள் எப்பொழுதும் உண்மையாகவே இருக்கும். புராணக் காரணங்களைப்போல் சரித்திரக் காரணங்களை உண்மை விஷயத்தில் ஒருபொழுதும் சந்தேகிக்கவேண்டிய அவசியம் ஏற்படாது. ஆகையால் நாம் இப்பொழுது கவனிக்க வேண்டியது தமிழ் மொழியின் மாண்பை நிலைநிறுத்தத் தமிழ்ப் பண்டிதர்கள் சாற்றும் சரித்திரக் காரணங்கள் எவை, அவை உண்மையில் தமிழின் பெருமையை ஸ்தாபிக்கத் தக்க வல்லமை பொருந்தியவை தானா என்பவைகளே யாகும்.

## சரித்திரக் காரணங்கள் ஆறு

தமிழ்ப் புலவர்கள் கூறும் சரித்திர சம்மதமான காரணங்கள் எல்லாம் சற்று கவனித்து நோக்கின் கீழ்கண்ட ஆறுவகைகளில் அடங்கும்.

(1) உலகத்தில் இக்காலத்தில் பயிலப்படும் பாஷைகளின் தொகை சுமார் 900 மாகும். இந்தியாவில் மட்டும் வழங்குவன இருநூற்று இருபத்திரண்டாகும். இவைகள் எல்லாம் தோன்றுவதற்கு வெகு காலத்துக்கு முன்னரே தமிழ்மொழி தோன்றியது. உலகத்தில் பழையமொழிகள் ஸம்ஸ்கிருதம், தமிழ், லத்தீன், கிரீக், ஹீப்ரு என்று ஐந்து எனக் கூறுவர். இவ்வைந்திலும் முதற்கண் தோன்றியது தமிழ். பிற பாஷைகள் எல்லாம் தமிழ்மொழி தோன்றிய பின்னரே தோன்றுவதாயின.

(2) தமிழ் பாஷை பிறபாஷைகளுக்குமுன் தோன்றியதோடு அது அக்காலத்தில் அவனி முழுவதும் பரவி பயிலப்பட்டு வந்தது. ஒருபாஷை எல்லாவற்றிற்கும் முன்னர் தோன்றியிருக்கலாம், அதனால் மட்டும் பெருமை ஏற்பட்டுவிடாது. அது ஒரு மூலையில் மட்டுமே வழங்கப்படாமல் உலக முழுவதும் பேசப்பட்டு வந்தால் மிக்க சிறப்புடையதாகும். அங்ஙனம் இருவகைச் சிறப்பும் ஒருங்கே அமையப் பெற்றது தமிழ்மொழி என்ப.

(3) தமிழ்மொழி மலடியன்று. அதன் வயிற்றிலிருந்து காலக்கிரமத்தில் பலபெரிய பாஷைகள் பிறந்து வளர்ந்து நிலவிக்கொண் டிருக்கின்றன. அங்ஙனம் அதன்வயிற்றில் பிறந்த பாஷைகளில் முக்கியமானவை தெலுங்கு, கன்னடம், துளுவம், மலையாளம் நான்குமாகும். தமிழ்மொழியில் தோன்றிய பாகதங்களுக்கோ கணக்கில்லை. முன்னாளில் தமிழ்மொழி பயின்றுவந்த பல பாகங்களிலும் அத்தகைய பாகதங்கள் பல தோன்றியிருந்தன. அப்பாகதங்களில் சில மறைந்தும் சில வேறுபாடடைந்தும் சில பழைய

உருவம் அதிகமாகக் குன்றுதும் உள்ளன. இக்காலத்திலும் அத்தகைய பாகதங்கள் இந்திய நாட்டின் வடமேற்கு மூலையிலுள்ள சிந்துநதி தீரத்திலும் வடகிழக்குப் பிரதேசத்திலுள்ள "சோட்டா நாக்பூர்" (சூடிய நாகபுரி) என்னும் இடத்திலும் காணப்படுகின்றன. இங்ஙனம் மக்கட்செல்வம் பெற்றுள்ள பாஷைகள் உலகில் காணக்கிடைப்பது அரிது.

(4) மக்கட்செல்வம் பெற்றுவிட்டால் மட்டும் போதாது. சிலபாஷைகள் மக்கட்செல்வம் பெற்றிருக்கலாம், ஆனால் அவைகளில் சில மக்களைப் பெறுங் காரணத்தினாலேயே கதலி முத்துச்சிப்பி முதலியன மக்கட்பேற்றால் மடிந்து மண்ணாவது போல் மடிந்து மறைந்து போகலாம். சில மறைந்து விடா. உலக வழக்கு ஒழிந்து ஏட்டு வழக்கில் மட்டுமே நிற்கலாம். அன்றிச் சில பாஷைகள் இறந்து படாமல் மக்கட்பேற்றால் முன்னைய பலம் அழகு முதலியன குன்றிப் போகலாம். இது மனிதர் இயற்கை, இவ்வியற்கை முறையைப் பாஷைகளிடமும் காணமுடியும்.

ஆனால் எந்த பாஷையானது மக்கட் பாஷைகள் பலவற்றைத் தோற்றுவித்தாலும் முன்போலவே அழகு ஆற்றல் முதலியன குறையாது இளமை இலக இன்றுகாறும் இருந்து வருமோ அது ஏற்றமுடையதென்று கூறலாமல்லவா; அத்தகைய அருங்குணம் அமைந்தது தமிழ்மொழியல்லவா என்று தமிழன்பர்கள் வினவுவர்.

(5) உலகில் உள்ள பாஷைகளை எல்லாம் அவைகளின் சப்த, உருவ, பொருள் ஒற்றுமை வேறுபாட்டுக்களால் பல தொகுதிகளாக மொழி நூல் வல்லுநர் வகுப்பர். அத்தொகுதிகளில் தமிழ்த்தொகுதி யொன்று. தமிழ் பாஷை ஏனையபாஷைத் தொகுதிகளில் சேர்ந்ததன்று. வேறு பாஷைத் தொகுதிகளைச் சேர்ந்து அடிமையாயிராது தமிழ்மொழி தனிச் செங்கோல் செலுத்தும் சக்ரவர்த்தினியாகும். சந்திரனும் தாரகைகளும் போல் தமிழும் தமிழிற் பிறந்த தெலுங்கு கன்னடம் மலையாளம் துளுவம் முதலிய தென் மொழிகளும் உலகில் ஒளி விட்டு நிற்கின்றன. தனிப்பெருங் குழுவின் தலைமை படைத்துள்ள பாக்கியம் தமிழிற் குள்ளதுபோல் ஏனைய மொழிகளுக் குள்ளது அரிது. இதுவும் தமிழ்மொழியின் ஏற்றத்திற்கேற்ற காரணங்களில் ஒன்றாகும் அல்லவோ என்ப.

(6) சாதாரணமாக பாஷை என்ற பதத்தைப் பார்த்தவுடன் அல்லது கேட்டவுடன் இரண்டு விஷயங்கள் மனதில் தோன்றுகின்றன. ஒன்று ஒலி, மற்றொன்று உருவம். உலகில் வழங்கப்படும் பாஷைகளில் பலவற்றிற்கு ஒலியும் உருவமும் ஒருங்கே அமையப் பெற்றிருக்கின்றன. சில பாஷைகள் இன்னும் ஒலி வடிவத்திலேயே உயிர் வாழ்ந்து வருகின்றன. அவைகளுக்கு உருவ வடிவம் ஏற்படவில்லை. ஒலியும் உருவமும் ஒருங்கே யமை

யப் பெற்ற பாஷையே சிறப்புடையது என்பதை யாவரும் ஒப்புக்கொள்வர். உருவமின்றி ஒலி மாத்திரமே யிருப்பின் அப்பாஷை அபிவிருத்தி யடைய மார்க்கமில்லை என்பது வெள்ளிடைமலை. அங்ஙனம் அபிவிருத்திக்கு அத்யாவசியமான உருவமும் பாஷை ஒலிவடிவமாய்த் தோன்றிய காலத்திலேயே உடன் தோன்றி விடுவதில்லை. ஒலிதோன்றி பல்லாயிரக்கணக்கான வருஷங்கள் கழிந்த பின்னரே உருவம் தோன்றுவதாகும். சில பாஷைகள் தாங்களாகவே ஒலியுடன் உருவத்தையும் பின்னர் சேர்த்துக் கொள்ளக் கூடியன. சில பாஷைகள் தாங்களாக உருவத்தை அமைத்துக் கொள்ள இயலாது, உருவத்தை உண்டாக்கிக் கொண்ட இதர மொழிகளின் உருவத்தையே தழுவித் தங்களுக்கும் உருவத்தை ஏற்படுத்திக் கொள்ளும்.

உலகில் ஆதியில் தோன்றிய மொழி தமிழ். அதுபோல உலகத்தில் முதன் முதலாக உருவம் உண்டாக்கிக் கொண்ட மொழியும் தமிழே. அதற்குப் பின்னர் தான் பிறபாஷைகளுக்கு உருவம் ஏற்பட்டது. அவ்வுருவமும் அநேகமாகத் தமிழ் மொழியின் உருவத்தை ஒட்டியே செய்யப்பட்டது என்பதற்குப் பல சான்றுகள் உள. ஆகையால் தமிழ்பாஷை உலகிற்கு எழுத்தறிவித்த தாகும். "எழுத்தறிவித்தவன் இறைவனாகும்" என்பது முதுமொழி. ஆகையால் தமிழ்மொழி தாணியிலுள்ள மொழிகளில் எல்லாம் தலை சிறந்தது என்று சாற்றுவதற்குள்ள தடை யாது என்றும் தமிழ் மக்கள் கேட்பர்.

## ஆதாரங்கள்

இந்த ஆறு சரித்திர சம்மதமான தெனத் தமிழர் கூறும் காரணங்களுக்குள்ள சான்றுகள் யாவை என்று முதற்கண் ஆராய்தல் வேண்டும். தக்க சான்றுகள் இருந்தால் மட்டும் இந்தக் காரணங்களைச் சரித்திர தேவதை ஒப்புக் கொள்ளக் கூடிய உண்மைகள் என்று உறுதிசெய்ய முடியும். அதன் பின்னரே அவை மொழி மாண்பிற்குரிய காரணங்கள் தானு என்று கவனித்தல் வேண்டும். ஆகையால் அடுத்த வியாசத்தில் இந்த ஆறு விதமான சரித்திரக் காரணங்களையும் தனித்தனியே எடுத்து ஆராய உத்தேசித்திருக்கிறேன்.

காய்த லுவத்த லின்றி யொருபொருட்கண்
ஆய்த லறிவுடையார் கண்ணதே—காய்வதன் கண்
உற்றகுணந் தோன்றாதாகு முவப்பதன் கண்
குற்றமுந் தோன்றாக் கெடும்.

(அறநெறிச் சாரம்)

---

# வள்ளுவர் பாயிரம்.

——:(o):——

(K. மழவராயன்.)

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை
உண்மைவெறும் புகழ்ச்சியில்லை. (பாரதியார்)

மலர்தலை யுலகின்கண் மல்கும் பல்வேறு பாஷைகளில் தமிழ் பாஷை ஒன்றாகும். தமிழ்மொழியில் பல்வேறு ஓல்காப் பெரும் புகழ்படைத்த பாவலர்கள் பரவியிருந்தார்கள். அவர்கள் அனைவரி னும் சிறந்தவர்கள் கம்பரும், திருவள்ளுவரும், இளங்கோவடிகளும் எனப் பாரதியார் பகர்கின்றார். இம்மூவரிலும் யாவரும் போற்றும் மேவருஞ் சிறப்புடையர் திருவள்ளுவரே யாவர். ஏனெனில் அவர் திருக்குறள் என் னும் பொதுமறையை உலகத்தாருக்கு வந்துதவியுள்ளார். இக்கட்டுரை அன்னார் தம் அரும்பனுவலின் பாயிரத்தை விளக்க எழுந்ததாகும். அதனைச் சிறிது ஆராய்வாம்.

'பாயிரமில்லது பனுவலன்றே'

என்றார் பவணந்தி முனிவர். அதாவது முகவுரை (Preface) இல்லாத நூல் ஓர் நூலாகக் கொள்ளப்பட மாட்டாது. மாடக்குச் சித்திரமும், மாநகர்க்குக் கோபுரமும், மாதர்க்கு ஆபரணமும் எவ்வாறு இன்றியமையாத வைகளோ அதேபோல் ஓர் நூலிற்குப் பாயிரம் இன்றியமையாதது. இப் பாயிரத்தின் பெயர் எழுவகைப்படும். அவையாவன: முகவுரை, பதிகம், அணிந்துரை, நூன்முகம், புறவுரை, தந்துரை, புனைந்துரை என்பன.

மேற்கூறிய எழுவகையில் வள்ளுவனார் பாயிரம் முகவுரையைச் சேர்ந்த தாகும். முகவுரையின் பொருள் நூற்குமுன் சொல்லப்படுவது என்பதாம். முகவுரை யெனினும், நூன்முக மெனினும் ஒன்றே. நான்முகனார் கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்ற நான்கு அதிகாரங்களில் தமது பாயிரத்தை அமைத்துள்ளார். அதனை ஒவ் வொன்றாக ஆராய்வாம்.

## கடவுள் வாழ்த்து

என்பது பாயிரத்தின் முதலாவது அதிகாரமாகும். அதாவது கவி தான் வழிபடும் கடவுளை யாயினும், ஏற்புடைக் கடவுளையாயினும் வாழ்த்து

தலாம். வள்ளுவர் பாயிரத்தின் முதலதிகாரம் எற்புடைக் கடவுள் வாழ்த்தாகும். எற்புடைக் கடவுள் வாழ்த்தெனின் மூவர்க்கும் பொதுப்படச் சொல்லி வாழ்த்துதல். திருவள்ளுவர் "எம்மதமும் சம்மதமே" என்ற கொள்கையராகலின் இவ்வாறு கடவுள் வாழ்த்துக்கூறினார்.

அகரமுதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு—

என்பது கடவுள் வாழ்த்தின் முதற்குறள். இதன் பொருள்: எவ்வாறு அகரம் எழுத்துக்களுக் கெல்லாம் தலைமை யானதோ அவ்வாறு உலகத்திற்குத் தலைவன் முதன்மையான பகவனாகும் என்பதாம். இக்குறளில் அகரம் எழுத்துக்களுக் கெல்லாம் தலைமையானது என்கின்றார். அகரம் தமிழெழுத்திற்கு மாத்திர மல்லாமல் வடவெழுத்துக்களுக்கும் முதன்மையானதால் எழுத்தெல்லா மென்றார். இவர் "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்ற கொள்கையினர் ஆதலினால் ஆதிபகவன் என்று மாத்திரம் குறிப்பிடுகின்றார். ஆதியென்பதற்கு,

"ஆதியே முதனேரோட லருகன் மாலீசன் வேதன்"

என்றும், பகவ னென்பதற்கு,

"பகவனே யீசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்" என்றும் சூடாமணி நிகண்டில் பொருள் காணப்படுகிறது. ஆதியென்பதின் பொருள் முதல், நேரோடல், அருகன், திருமால், சிவன், பிரமன் என்பதாம். பகவனென்பதின் பொருள் சிவன், திருமால், பிரமன், அருகன், புத்தன், என்பதாம். ஆகவே ஈண்டு ஆதிபகவ னென்பதற்கு முதன்மையான சிவனென்றும், முதன்மையான திருமால் என்றும், முதன்மையான பிரமன் என்றும், முதன்மையான புத்தன் என்றும் பலவிதமாகப் பொருள் கொள்ளலாம். ஆதலால் இவரைச் சைவர்கள், வைணவர்கள், ஆருகதர்கள், பௌத்தர்கள் முதலியோர் தங்கள் சமயத்தவரென்று பாராட்டுகின்றார்கள். ஏன்? இவரியற்றிய நூலான திருக்குறள் மதவேறுபாடின்றி யாவர்க்கும் பொதுப்பட நிற்கின்றது. இதனைக் கொடுமலையாளத்துக் குடியிருப்பானாகிய சுந்தரப் பெரியார்,

வள்ளுவர் செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்
உள்ளுவ ரோமநுவாதி ஒருகுலத்துக் கொருநீதி.

என்று வாயார மனதார வாழ்த்திக் கூறுவதினின்றும், புலவர் புராண முடையார்

நால்வர்சொல் சைவர் வேதம் நளிர்குரு கூரன் சொல்லைப்
போல்வலார் சிலர்தாஞ் சொல்லும் பொருவில் பாகவதர் வேதம்
வால்வளை யுலவும்வீதி மயிலை வள்ளுவன் சொல் யார்க்கும்
மேல்வழி யுணர்த்திக் கீழ்மை விலக்கு நல் வேதமாமே.

என்று சமயவேறுபாடின்றிக் கூறுவதாலும் இனிது புலனும். கடவுள்

வாழ்த்தில், ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசை யேகினான், வேண்டுதல் வேண்டாமை இலான், இருவினையுஞ் சேரா இறைவன், பொறிவாயிலைந் தவித்தான், தனக்குவமை யில்லாதான், அற ஆழி அந்தணன் ஆகிய எண் குணங்களையும் எட்டுக்குறள்களிலடக்கி ஒன்பதாவது குறளில் அத்தகைய குணங்களையு முடைய முழுமுதற் கடவுளை வணங்கவேண்டு மென்றும் கூறி கடைசிக்குறளில் அவ்வாறு வாழ்த்தாதவர்கள் பிறவிக்கடலைக் கடக்க முடியாதெனவும் கூறி கடவுள் வாழ்த்தென்னும் அதிகாரத்தை முடித்தனர். சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல் முதலிய பத்தழகும் பாவலர் பெருமான் பனுவலில் பதிந்து கிடக்கின்றன. ஈண்டு வள்ளுவர் கடவுள் வாழ்த்தின் நுட்பப் பொருளடங்கிய திருநாவுக்கரசர் தேவாரப் பதிகமொன்று ஞாபகத்திற்கு வருகின்றது. அது பின் வருமாறு:—

## திருவாரூர்த் தேவாரம்

முன்னமவனுடைய நாமங்கேட்டாள்
மூர்த்தியவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னையவனுடைய வாரூர் கேட்டாள்
பெயர்த்து மவனுக்கே பிச்சியானாள்
அன்னையையு மத்தனையுமன்றே நீத்தா
ளகன்றாள கலிடத்தா ராசாரத்தைத்
தன்னை மறந்தா டன்னாமங் கேட்டா
டலைப்பட்டா ணங்கை தலைவன் றாளே.

## வான் சிறப்பு

என்பது இரண்டாவது அதிகாரமாகும். வான்சிறப்பு என்பது மழையின் பெருமை என்று பொருள் படும். எவ்வாறு சந்திரனும், சூரியனும் நமக்கு இன்றியமையாதனவைகளோ அவ்வாறு மழையும் நமக்கு இன்றியமையாதது. ஒரு நாட்டின் அல்லது தேசத்தின் செழிப்பிற்கு மழையே முக்கிய காரணமாகும். மழையினின்று தான் மன்னுயிர்கள் நிலைபெற்று வருகின்றன. ஆதலால் அதனைச் சாவாமருந் தென்றே கூறலாம். மழையின்றேல் மன்பதைகளைப் பசி யென்னும் பிணி வருத்தும்; தானம் தவம் முதலியன நாட்டில் கிடையா. தேவர்களுக்குச் சிறப்புடன் பூசை நடவாது. உழவர் ஏரினால் நிலத்தை உழமாட்டார்கள். ஆதலால் நல்லாரைக் கெடுப்பதுவும், தீயோர்க்குத் துணையாவதும் ஆகிய இவையனைத்திற்குங்கூட மழையே முக்கிய காரணமாகும். இத்துணை இன்றியமையாத மழையின் மாண்பைப் புலவர் திலகராய வள்ளுவர் பெருமான் கடவுள் வாழ்த்தின் அடுத்தபடியாக அமைத்துக் கூறுவது பாராட்டற் பாலதே.

## நீத்தார் பெருமை

என்பது முகவுரையின் மூன்றாவது அதிகாரமாகும். நீத்தார் பெருமை யெனின் துறந்தார் பெருமையென்று பொருள்படும். துறந்தா றெனின் எதைத் துறந்தவர்கள்? மண், பொன், பெண் ஆகிய மூன்றையும் துறந்த வர்களல்லர். ஆனால் நல்லொழுக்கத்தில் நின்று தீயொழுக்கங்களைத் துறந் தவர்கள். இவ்வுண்மை இவ்வதிகாரத்தின் முதற் குறளிலிருந்து நன்கு புலனாகிறது. அக்குறள் வருமாறு:—

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிபு—

இதன்பொருள் நல்லொழுக்கத்தில் நின்று தீயொழுக்கங்களைத் துறந்தாரது பெருமையை நூல்களின் முடிவானது எல்லாப் பெருமைகளிலும் மேலான தாகக்கொள்ளும் என்பதாம். அடியார்க் கெளியவன் ஆண்டவன் என்பது யாவருமறிந்ததோர் உண்மை. அதனைத் தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததிலிருந்தும், வாதவூரர்க்கு வாசித்தலைவராக வாசிகள் வாங்கி வந்ததி லிருந்தும், பிட்டுக்குமண் சுமந்ததி லிருந்தும் அனையபிறவற்றி லிருந்தும் அங்கையிற்கனி யெனச் சங்கையறத் தெரியலாம். ஆகவே நம் தேவரும் அடியார் பெருமையைப்பற்றி மூன்றாவதாகக் கூறியுள்ளார். சுந்தரமூர்த்தி சுவாமிகளும் "அடியார்க் கடியேன்" என்ற கடைசியடியையுடைய திருத் தொண்டத் தொகையைப் பாடியுள்ளார். ஏன்? கடவுளை வணங்கினும் அவரது அடியார்களை வணங்கினும் ஒன்றே.

நீத்தார் பெருமையெனின் முற்றத்துறந்த முனிவரது பெருமை யென்று பொருள்படும் எனச் சிலர் கூறுவார். அதற்கு மேற்கோளாக,

ஐந்தவித்தா னாற்றலகல் விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி—

என்ற குறளை எடுத்துக் காட்டுவர். இக்குறளுக்கு அவர்கள் ஐந்தாசைகளை யும் ஒழித்தவனது வல்லமைக்கு விண்ணுலகத்துத் தலைவனாகிய இந்திரனே சாட்சியாம் என்று பொருள் கொள்வர். அதாவது, கௌதமமுனி வல் லமைக்கு தேவேந்திரனே சாட்சியாம் என்பதாம். இக்குறளுக்கு ஐம் பொறிகள் வாயிலாக வரும் தீமைகளை அகற்றினவனது வல்லமைக்கு விண் தல மன்னவனாகிய இந்திரனே ஒப்ப அமைவான் என்று பொருள் கொள்ளல் வேண்டுமென்பது சிறியேன் கருத்தாகும். அதாவது ஐம் பொறிகளை யடக்கி இல்லறதவம் புரியும் திருத்தொண்டர்களைக்கண்டு தேவேந்திரன் தன் பதவியை இழக்க நேரிடுமே என்று பயப்படுவான் என்பதாம். உதாரணமாக திருவள்ளுவரையே நாமெடுத்துக் கொண்டால் அவர் மண்டலத்தில் வாழ்ந்திருந்து விண்டலத்திலுள்ளோர் தெய்வ மென் றேத்தினார்கள். ஏன்? அவர் இல்லற தவத்தைக் கைக் கொண்டார்.

ஆகவே நீத்தார் பெருமை யென்பது அடியார் பெருமை என்று பொருள் படும் என்பது தமியேனுடைய தாழ்ந்த கருத்தாகும்.

## அறன் வலியுறுத்தல்

என்பது நான்முகத்தின் இறுதியதிகாரமாகும். மூன்றாவது அதிகாரத்தின் கண் அடியார் பெருமையைக் கணித்த செந்நாப்போதார் இவ்வதிகாரத்தின் கண் அவர்கள் செய்யும் அறத்தின் திறத்தை அமைத்துக் கூறினர். இக்காசினியின் கண்ணுள்ள அனைவருடனும் இறுதியாகச் செல்வது அறமேயன்றிப் பிறிதொன்றுமில்லை. இவ்வறமானது இம்மை, மறுமை, வீடு என்கின்ற மூன்றையும் தருதலால் அது மிகவும் மேன்மை வாய்ந்தது. நிலைபெற்ற உயிர்களுக்குத் தருமத்தின் மேலானது வேறொன்றுமில்லை. அவ்வறத்தினும் மேற்பட்ட செல்வமுமில்லை. அத் தருமத்தை மறத்தலைப் பார்க்கினும் கேடில்லை. ஆதலால் மனம், வாக்கு, காயம் இம் மூன்றாலும் அறஞ்செயல் வேண்டும். ஒருவன் அறத்தைச் செய்தால் அவ்வற மவன் பிறப்பை யகற்றும். ஆதலால் இவ்வறத்தை நாளைச் செய்வோம் என்று கடத்துதல் கூடாது

அன் றறிவா மென்னாது அறஞ்செய்க; மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை—

என்ற குறளிலிருந்து இறக்கும்போது தருமஞ் செய்வோம் என்று கூறாமல் தினம் அறஞ்செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால் அது சாகும்போ துதவியாகும் என்பது நன்கு புலனாகிறது. ஆதலால் இளமையிலேயே தருமத்தைச் செய்வோமென விரும்பி உறுதியாக்கொண்டு மிகுதியாய்ச் செய்யவேண்டும். ஒருவன் முதுமைப் பருவத்தில் பிணியால் படுத்தவன் நோய்தீர்ந் தெழுதல் அருமை. ஆதலால் தருமத்தை இளமையிலேயே செய்தல் வேண்டும்.

கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்மின்
முற்றியிருந்த கனியொழியத் தீவளியால்
நற்காயுதிர் தலு முண்டு.

என்றபடி. இவ்வாறான அறத்தை வலியுறுத்தி நான்காவதாக ஆசிரியர் அமைத்துள்ளார்.

முடிவாக நோக்குங்கால் வள்ளுவர் தமது பாயிரத்தில் முதலாவது கடவுளின் தன்மையையும் இரண்டாவது அவரது அருளின் தன்மையையும் மூன்றாவது தொண்டர் பெருமையையும் நான்காவது அறன் வலியுறுத்தலையும் அமைத்து நூலைத் தொடங்குவது திருக்குறளின் பெருமைக்கோர் சான்றாகும். இத்துடன் என் கட்டுரையை முடிக்கின்றேன். சுபம்.

---

# ஆசிரியர் சீடனுக்கு
# உபதேசிக்கும் முறைமை.

தமிழ்ப்பண்டிதர்-ஆ. கமலநாத முதலியார்.

ஆசிரியரே ! கடவுளின் அடியைச் சேரும் சுத்த நிலையைக் கூறும்படிப் பிரார்த்திக்கின்றேன்.

பரமசிவத்தின் திருவடியைச் சேரும் நிலை காரண பஞ்சகிருத்தியத்தால் அறியும் முறைமையினை யுடையதாம். இம்முறைமையினை இப்போதே சொல்லுகிறோம். ஆனால் நாம் முன்பு சொன்னவைகளைக் கேட்டறிந்து கொண்டதுபோல அறிவதல்ல. மற்றெவ்வா றென்னில், இது முறைமை யினையுடைய சமாதியிலிருந்து அறியத்தக்கதாம். அவ்வாறறிந்தால் நல்ல சுத்த நிலை பொருந்தும். இச்சுத்த நிலை கிரமமாக நடந்து விளங்குமானால் பரம சிவத்தின் திருவடியும் ஆனந்தப்பேறும் தெரிதலாம். அதனால் முன்பு பொருந்திய துயரங்களெல்லாம் நீங்கிவிடும் என்க.

மேற்கூறிய சமாதியிலிருந்து அறிவது எவ்வாறென்னில் ஆறுவகையாகிய பயனில்லாத தொழில்களை விட்டு இத்தேகத்தின் மேலும் போகங்களின் மேலும் உள்ள பற்றுக்க ளெல்லாம் சேராமல் கைவிட்டுத் தனியாகிய ஏகாந்தங் கைக்கொண்டு பொருந்திய இடத்தில் ஒன்றினைச் சாராமலும் உடலினது வளையாமலும் சரீரத்துக்குப் பொருந்திய சுகாசனத்தைச் செவ்வையாய்ப் பொருந்தி இறந்த காலத்திலும், நிகழ்காலத்திலும், எதிர் காலத்திலும் வருகிற பயனைக் கருதாமலும் ஏகாக்கிர சித்தமாய்த் தத்துவங்களைச் சடமென்றறிந்து தேகியைக் காட்டியது திருவருளென்று முறைமை கூறுகின்றது.

பிருதிவி தத்துவ முதல் நாததத்துவ மீறாகச் சொல்லப்பட்ட முப்பத்தாறு தத்துவங்களுக்குள் ஒவ்வொரு தத்துவத்துக்கும் உருவமும் தரிசனமும் சுத்தியும் இவைகளென்றறிந்து அவைகளை யெல்லாம் ஒவ்வொன்றாக நியதி செய்து உயர்ந்து நாத தத்துவத்திலேறி சித்தக்கருவிக ளென்னுற் காணப்பட்டதனால் அவைகள் சடமாம். இவைகளைக்கண்டு கழன்றவன் நான். இவ்வாறு நான் காணும்படி காட்டியது பரமசிவத்தின் திருவருளென்றறிந்து அவ்வருளைப் பொருந்தக் கடவை. அதனில் பரமசிவனது பஞ்சகிருத்தியங்கள் நடக்கு முறைமையைக் கேட்பாயாக.

தத்துவ நியதியில் பஞ்சகிருத்தியம் நடக்கு முறையைச் சொல்லுகின்றது.

மேற்கூறிய தத்துவங்கள் ஒவ்வொன்றாகக் காணப்படுவதே சிருஷ்டி. அதனைக் கண்டு அதில் நின்றும் தரிசித்ததே திதி. அதனை நீங்குவதே, சங்காரமாம். திருவருளிடத்தில் பேரன்பு பொருந்தி யுண்டாகுதல் சங்காரமாம். அந்நினைப்பு மறைப்பாகி யுறுவது கேவலம் இங்குக் கூறப்பட்ட இவ்விரு வகையும் நீங்கும்படி யென்க.

ஆசாரிய சுவாமிகளே! மேற்கூறிய சகல கேவலங்கள் நீங்கும் உபாயத்தை அடியேனுக்குத் தெரிவிக்கும் படியாய்ப் பிரார்த்திக்கின்றேன்.

மாணவ! ஓர் உறுதி சொல்லுகிறோம் அதனை நீ கேட்கக் கடவை. திருவருளில் நிற்கும்போது நினைவு உண்டாகுமானால் நீ அந்த நினைவின் வசமாகுவை. அவ்வாறு அதன் வசமான பின்பு தெளிந்து சீர் பொருந்திய திருவருளில் நிற்பை. இதில் நின்றால் அந்த நினைவு உன் கைவசமாகும். இவ்வாறு உண்டாகிற நினைவானது அந்த அருளின் வசமாகும். இதனை திரோபவமென்று அறியக்கடவை. அந்த நினைவானது திருவருளைச் சென்று சேர்தலே அனுக்கிரக மென்று தெரிந்து கொள். அந்தத் திருவருளை விரும்பினால் சிலநாளில் சகலாவஸ்தை நீங்கிவிடும்.

சகலம் நீங்கின விடத்தில் கேவலம் மேலிடும் என்றும் சமாதி நிலையில் நின்றால் அதுவும் நீங்கும் என்றும் கூறுகின்றது.

சகலம் நீங்கின விடத்தில் கேவலமானது வந்து வந்து தாக்கும் முறைமை யுடையதாம். அது எவ்வாறு எனில் குளிர்ச்சி பொருந்திய சந்திரனை மேகமானது வன்மையுடன் வந்து அடிக்கடி மூடுவதுபோல் என அறிக. இந்தக் கேவலமானது முன் சொல்லிய சகலத்தோடு சேர்ந்து பொருந்தி வரும் தகைமை யுடையதாம். அது அத்தகைமையுடையதா யிருந்தாலும் சமாதியில் உடலானது வளையாமலும் சுவரில் சாராமலும் பொலிவுடனே கற்றூணைப்போல இருந்து குற்றமற்ற பெரிய திருவருளினாலே பார்த்துக் கேவலம் மேலிடாமல் தடுத்தால் அக் கேவலமும் அறும்.

இது ஆணவ கன்ம மாயைகளாகிய அசுத்தம் நீங்கின விடத்தில் சுத்தம் தோன்றும் என்னும் முறைமை கூறுகின்றது.

மாயையும் கன்மமும் அந்தச் சகலத்துடன் நீங்கிவிடும். அது நீங்கவே மேல் உண்டாகுமென்ற கேவலத்துடன் ஆணவம் நீங்கிவிடும். மாயை, கன்மம் ஆணவம் என்ற இம் மூன்றும் அசுத்தம். இவைகள் நீங்கினவிடமே சுத்தம். அதைச் சொல்லு மிடத்து அஸ்தமன கிரியினிடத்துச் சூரியன் விழும் படியான மாலைக்காலம் போலவும் பரிசுத்தமான அருணோதயம் போலவும் தோன்றும். இவ்வாறு தோன்றுவதை இராப்பகல் அற்ற இடமென்றும் நினைப்பும் மறப்பும் இல்லாத இடமென்றும் பிறப்பும் இறப்பும் இல்லாத இடமென்றும் பெரியோர்கள் சொல்வார்கள்.

இது திருவருள் நிற்கும் நிலைமை கூறுகின்றது.

மேற்கூறிய சுத்தத்தைப் பெற்று உன் போதம் சிறிதும் தோன்றாமல் அதில் நின்றால் திருவருளானது தோன்றும். அவ்வாறு தோன்றிய திருவருளானது எல்லாத்திக்குகளிலும் பலகோடி சூரியர்கள் ஒரே இடமாகத் தோன்றும் முறைமைபோல சந்தேகம் இல்லாத ஒரு பேரொளியாம். அமிர்த

கடலானது உலகமெங்கும் பரந்ததன்மை போல ஜடசித்துக்களுக்கு உட்புறனுகிப் பூரணமாயும், நிராமயமாகியும் நிஷ்களமாகியும், நிருமல சொரூபமாகியும் அழிவில்லாத சிறந்த பொருளாகியும் எங்கெங்கும் விருத்தியாகும்.

மாணவனே! இனி தற்போதம் நீங்க வேண்டுமென்னும் முறைமை கூறுகின்றேன். இவ்வாறு தோன்றிய திருவருளில் உன் போதம் தோன்றும். எவ்வாறு எனில் முன்னம் மாயா போகத்தைக் கொண்டு சொல்லுதற்கரிய பிரபஞ்சத்தை அறிவதுபோல இந்தத் திருவருட் போதத்தால் அந்தத் திருவருளையும் சிவத்தையும் நீங்குதற்கரிய உன் போதம் எதிரிட்டுக் காணும்; அப்போதம் நீங்கிப் பரமசிவத்தைச் சேரவேண்டும். அந்தப் பொருளைப் பகுத்தறிந்து அதில் நீ நிற்கும் முறைமைக்கு கண்ணொளியானது கிரணத்தையும் சூரியனையும் பிரிவுபட நோக்குதல் போலாம்.

மாணவனே! இனி தற்போதம் நீங்குதற்கு உபாயம் கூறுகின்றேன்.

உன் போதம் நீங்குதற்கு ஓர் உபாயம் உண்டு சொல்லுகிறேன் கேள்: கண்ணானது கிரணத்தையும், சூரியனையும் பிரித்துப்பாராமல் அன்புடன் அந்தச் சூரியன் என்றும் ஒளியென்றும் சொல்லுகிற இவ்விரண்டு பேதங்களு மில்லாமல் தோன்றும். அதுபோல நின் போதமானது அருளென்றும் சிவமென்றும் நானென்றும் பிரிக்காமல் பரிபூரணமாகிய பரமசிவத்துக்கு நேராக நீ நிற்கில் ஒன்றென்றும் இரண்டென்றும் ஆகாத ஐக்கியபேரின்பத்துடன் பொருந்தும் பேரின்பமானது எழு கடலினும் பெரிதாம்.

இனிப் பேரின்பம் தோன்றுதற்கு மேற்கோளும் கூறுகின்றார்.

முன்னம் பொருந்திய தத்துவங்களும் ஆணவ மலமும் சீவ அறிவு என்று சொல்லியவற்றுள் நான் ஒன்றுகிலும் கண்டிலன். இது என்ன குருவே! என, மாணவனே! சொல்லக்கேள். இருள் நட்சத்திரங்கள் சந்திரப் பிரகாசம் என்னும் இவைகள் சூரியப் பிரகாசத்திற்கு முன் தோன்றாத முறைமை போல அவைகள் சிவத்தின் முன் தோன்றாவென்று அறிவாயாக. நினைத்தற்கரிய சுகமானது அச்சிவத்துடன் கலந்தபோது உண்டானது எவ்வாறு எனில் பொருந்திய பெண்ணும் ஆணும் கூடுமிடத்து உண்டாகும் சிற்றின்பம் போல அழிவில்லாத உயிராகிய பெண்ணும் சிவமென்னும் ஆணும் கூடின போது பேரானந்தக்கடல் உண்டாகும்.

குருவே திருவடிகளைச்சேரும் உபாயம் இதுவென்று முன்னம் உரைத்தருளினீர். அந்தத் திருவடி என்பது இங்கு எது என்னில் மாணவ கேள். திரோபவம் அனுக்கிரகம் என்கிற அவ்விரண்டுமே பரமசிவத்தின் திருவடிகளாம். இவைகளில் ஒரு திருவடி கீழூன்றி நிற்கும். மற்றொரு திருவடி மேல்தூக்கின வண்ணமாக நிற்கும். கீழூன்றிய திருவடியானது நிலைபெற்ற அரிய உயிர்களுக்கு வருகிற நல்வினை தீவினை யென்னும் இரண்டு வினைகளையும் சமமாக்கி மலபரிபாக முண்டாக்கும். தூக்கிய திருவடியோவெனில் பேரானந்த வெள்ளத்தைக் கொடுத்தருளும். இத்தன்மையுள்ள இரண்டு திருவடிகளும் உயிர்களுடைய சிரசின்மேல் பிரிவறப் பொருந்திய கனகசபையில் நின்ற நிலையாம். இது உண்மையே யென்க.

---

# ஜேம்ஸ் கார்பீல்டின் சலியா முயற்சி.

———:(o):———

(T. S. குழந்தைவேலன், திருவானைக்கா.)

'அதிர்ஷ்டம்' என்பது சோம்பேறியின் வாக்கு. உழைப்பவன் உன்னதம் பெறலாம். உழைப்பதில் உலையா ஊக்கம் வேண்டும். உள்ளத் தளர்வின்றி உழைக்க வேண்டும். உழைத்து உழைத்து உயர்வைக் காணவேண்டும். உயர்ச்சி காணுந்தனையுஞ் சலியா முயற்சியினைக் கைக்கொள்ளல் வேண்டும். குடிசையிற் பிறந்தாலும் குன்றா ஊக்கத்துடன் உழைப்பவன் குபேரனாகி குவலயம் புகழ விளங்குதல் கூடும். இதற்கு ஜேம்ஸ் கார்பீல்டு சரித்திரம் போதிய சான்றாகும்.

ஜேம்ஸ் கார்பீல்டு அமெரிக்காவில் ஆரெஞ்சு என்னுமிடத்தில் ஒரு குடிசை வீட்டில் அப்ராம் கார்பீல்டு என்பவருக்கும் எலிஸா என்னும் மாது சிரோமணிக்குமாக 1831-வருஷம் நவம்பர் மாதம் 19-ந் தேதியில் பிறந்தார்.

இவர் இளமை முதற்கொண்டே மிக்க சுறு சுறுப்புடையவராயும், எந்தக் காரியத்தையும் சரிவரச் செய்து முடிக்கும் இயல்பினைக் கொண்டவராயும் விளங்கினார். சலியா உள்ளங் கொண்டவர். பொறுப்பும் நிதானமு முடையவர். கர்வம், அற்றவர். இன்னும் பல அரிய குணங்களை இவர் பிறவியிலேயே—மாதாவின் கர்ப்பத்திலேயே பெற்றிருந்தார்.

இவர் ஏழைக் குடிசையிற் பிறந்தும்—ஒவ்வொரு நாளும் உண்ணும் உணவுக்கு உழைத்துவரும் ஊதியமல்லாது ஒருவழியு மில்லாத வாழ்வினைப் பெற்றிருந்தும் தம்முடைய உள்ளஞ் சலியா உழைப்பினாலும் தளரா ஊக்கத்தினாலுமே உலகம் போற்றும் உன்னத நிலை யடைந்தாரென்ற விஷயம் மாணவர்கள் நெஞ்சிலிருத்த வேண்டிய தொன்றாகும்.

கார்பீல்டு கல்வி கற்பதற்காகப் பட்டபாடுகளும் செய்த முயற்சிகளும் அனந்தம். எத்தனையோ முயற்சி பாடுகளில் முயன்று முடிவில் பெரும்பேறு பெற்றார். அத்தனை கஷ்டங்களை அனுபவித்தும் ஒன்றிலும் உள்ளம் பேராத கார்பீல்டு சரித்திரம் போல் மற்றோர் சரித்திரம் காணுதலரிது. கார்பீல்டு சரித்திரம், படிப்பவரின் மனதைப் பரவசப்படுத்தி விடுகிறது. உள்ளத்தைத் தட்டி யெழுப்பி விடுகிறது; உலையா ஊக்கத்தை ஊட்டிவிடுகிறது; ஓய்ந்த நெஞ்சுக்கு உறுதி யளித்து விடுகிறது; புதிய பலம் புகட்டி புத்துயிர் பெற்ற மனிதனாய்ப் பரிமளிக்கச் செய்துவிடுகிறது. தாமே சம்பாதித்துக் கல்வி பயின்று தம் புத்தியின் பலத்தினாலேயே பெரிய மனிதராய்ப் பிரகாசித்தவர் ஜேம்ஸ் கார்பீல்டு ஒருவரே யென்று உறுதியாய்க் கூறலாம்.

கார்பீல்டு இளம் பருவத்திலேயே கூரிய புத்தியும் சாதுரியமாய்ப் பேசும் சாமர்த்தியமும் பெற்றிருந்தா ரென்பதை ஒரு சம்பவத்தால் விளக்கு வோம். ஒருசமயம் கார்பீல்டு பள்ளியில் ஏதோ தவறு செய்தாரென்பதற் காக உபாத்தியாயர் தண்டனையாக, கார்பீல்டைப் 'பள்ளிக்கூடத்தை விட்டு வீட்டுக்கு ஓடு' என்று சொன்னார். இது பையன்களுக்குப் பெரிய தண் டனை—அவமானம். கார்பீல்டு சிறிதும் யோசிக்கவில்லை. உடனே வீடு வரையிலும் ஓடித் திரும்பிவந்தார். 'என் வந்தாய்?' என்று உபாத்தியாயர் கேட்டார். 'வீட்டுக்குத்தானே போகச் சொன்னீர்கள், அங்கேயே இருக்கச் சொல்ல வில்லையே' என்று கொஞ்சமும் தயங்காமல் கார்பீல்டு பதில்சொன் னார். இது எத்தகைய சமயோசிதமும் விநோதமுமாகும் பாருங்கள்! இன்னும் கார்பீல்டின் அறிவின் திறத்தை எடுத்துக்காட்ட பல நிகழ்ச்சிக ளுண்டு.

கார்பீல்டு வாசிப்பில் மிகப் பிரியர். கலா விநோதரென அவரை யழைக்க லாம். புத்தகம் கையிலிருந்து விட்டால் சாப்பாடுகூட அவருக்குத் தேவை யிராது. புத்தக ருசி யறிந்தவர்கள் அந்த இன்பத்திலேயே ஆழ்ந்து விடு வதை நாம் கண்டிருக்கிறோம். அது எல்லோருக்குமே ஏற்படுவதில்லை. "தின்று ருசி கண்டவனும், பெண்கள் ருசி கண்டவனும் விடமாட்டார்கள்" என்று உலகில் பழமொழி சொல்லுவார்கள். அவற்றிற் கேனும் சலித்து விடுவதற்கான ஒரு எல்லை யுண்டு. படிப்பு ருசி கண்டவனுக்குச் சலிப்பேது? அவன் ஆயுளுள்ள வரையிலும் அவ்வின்பத்தை அள்ளிப் பருகி ஆனந்த மடையலாமன்றோ?

கார்பீல்டு புத்தகப் பிரியராயிருந்ததற் கனுகுணமாக அவரிடம் அதிசய ஞாபக சக்தி அமைந்திருந்தது. ஒரு முறை அறிந்த நல்ல விஷயங்களை எக் காலமும் மறக்க மாட்டார். ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று பிரயாசைப் படுவோர்களே எத்தனையோ சங்கதிகளை மறந்து விட்டு மயங்கு கிறார்கள். இவர் எந்தச் சிரமமுமில்லாமல் அறிந்த விஷயங்களை அப்படியே மனதில் விழுங்கி விடுவது எத்துணை ஆச்சரியம்! படித்த சங்கதிகளைத் தனி மையிலிருந்து சிந்திப்பதும், பிறர்க்குச் சொல்லிக் களிப்பதும் கற்றவை மறந்து போகாமலிருக்கச் செய்ய ஒரு நல்ல வழி. இதையே வாசி-யோசி-வசனத்து ருசி என்று ரொருவர்.

அறிவிருந்தால் அதை விருத்தி செய்யச் செல்வமில்லா திருப்பதும், பணமிருந்தால் கற்கும் கவலையும் அறிவுமில்லா திருப்பதும் உலகில் கண் கூடு. இரண்டுங் கூடி பரிமளிப்பது எங்கோ அபூர்வம். கார்பீல்டு ஏழ்மை யினால் மேலே வாசிக்க வியலாது பன்னிரண்டு வயதிலேயே வயலில் வேலை செய்யும் துர்ப்பாக்கியம் பெற்றார். அதனால் அவர், மனம் வருந்தினாரில்லை. உற்சாகத்துடன் பகலெல்லாம் வேலை செய்துவிட்டு இரவில் வாசிப்பார்.

தனக்குத் தெரியாத எந்த நல்ல விஷயங்களையும் அறிந்து கொள்வதில் மிகுந்த ஆவல் காட்டி வந்தார். தன் தாயாரைக் காப்பாற்ற வேண்டி தச்சு வேலை செய்து சம்பாதித்தார். ஒழிந்த நேரங்களிலெல்லாம் புத்தகமுங் கையுமாயிருந்து கல்வி பயின்றார். வெறும் புத்தகப் பூச்சியாயிராமல் எந்த வேலையையும் இகழ்ச்சி யென்று கருதாமல் விரைவில் கற்றுச் செய்தார். 'கண் பார்த்தால் கை வேலைசெய்யும்' என்பது அவரிடம் பூரண மாய்ப் பொருந்தி யிருந்தது. தச்சுவேலை கிடைக்காத போது காட்டில் மரங்களை வெட்டும் வேலை செய்து பொருள் தேடினார். காடழிக்கும் வேலை செய்யும் பொழுது இரவு நெடுநேரம் கண்விழித்து வாசித்தார். கல்வியில் கார்பீல்டுக் கிருந்த பிரியம் போல் யாருக்குமே இருந்திருக்காது.

கார்பீல்டுக்குப் பதினைந்து வயதாகும் போது கிளீவ்லாண்டுக்குச் சமீ பத்திலுள்ள பார்டன் (Barton) என்பவரின் உப்புக் கிடங்கில் வேலைக்கிருந் தார். அவ்விடத்திலும் கார்பீல்டு தருணங்கிடைத்த பொழுதெல்லாம் புத்த கங்களை வாசித்து அறிவை வளர்ச்சி செய்து கொள்வதிலேயே கண்ணு யிருந்தார். கார்பீல்டினிடம் வீண் பொழுது விலைக்குங் கிடைக்காது.

ஒரு நாள் பார்டன் என்பவரின் மகள் கார்பீல்டைப்பார்த்து 'கூலிக்கு வேலை செய்பவன்' என்று இகழ்ச்சி செய்தாள். அதைப் பொறுக் காமல் கார்பீல்டு உடனே அவ்வேலை வேண்டாமென்று வீட்டுக்கு வந்து விட்டார். கார்பீல்டு பணிவதிலும் ஆண்மை கொண்டிருந்தார். அன்புக்குப் பணியலாம். அதிகாரத்திற்குப் பணிவது கேவலம் அடிமைத்தனந் தானே? இதிலிருந்து கார்பீல்டு சுதந்தரம் குடிகொண்ட உள்ளத்தின ரென்பது தெளிவு. உப்புக்கிடங்கு வேலை போன பிறகு மரக்கலத்தில் வேலை செய் தார். அதில் கார்பீல்டு அனுபவித்த கஷ்டம் அநந்தம். ஒருமுறை தண்ணீ ரில் வீழ்ந்து உயிருக்கே அபாயம் நேரவிருந்தது. கடவுள் சகாயத்தினு லேயே அவ்வாபத்திலிருந்து பிழைத்தாரெனல் வேண்டும்.

கார்பீல்டுக்குப் புத்தக ஆசை அதிகமா யிருக்கிறதைக் கண்ட எலிஸா அவரை எங்ஙன மேனும் படிக்கவைத்துப் பண்டிதனுக்கிவிட வேண்டு மென்று கருதி, செஸ்டர் (Chester) என்னுமிடத்திலுள்ள கல்விச்சாலைக்கு அனுப்புவித்தாள். கார்பீல்டு கல்விச் சாலையில் சேர்ந்தார். ஆனால் கையில் பணம் கிடையாது. பள்ளியில் வாசிக்கும் நேரம் போக மற்ற நேரங்களில் தச்சுவேலை செய்து சம்பாதித்தார். தானே சம்பாதித்துக் கொண்டு வாசித்து முன்னுக்கு வந்த கார்பீல்டு சரித்திரம் எல்லோராலும் கொண்டாடும் பெரு மையுடையது. விளையாட எவ்வளவோ விருப்ப மிருந்தும் அதை லட்சியம் செய்யாமல் வேலையையே விரும்பினு ரென்றால் இவருக்கிருந்த ஊக்கமும் கல்வியபிலாஷையும் இவ்வளவின வென்று வரையறுத்தல் வேண்டுமோ?

செஸ்டர் வித்யா சாலையில் புத்தக நிலையம் இருந்தது. அதிலுள்ள ஒவ்வொரு புத்தகமாய் வாங்கி இரவைப் பகலாக்கிக் கொண்டு வாசித்தார். கார்பீல்டின் சலியா முயற்சி எத்துணைச் சிரேஷ்டமானது என்பதைக் கண்டீர்களா ? இத்தகைய ஓயாவுழைப்பைக் கொண்ட கார்பீல்டே அப் பள்ளியில் முதல் பையனாகத் திகழ்ந்தா ரென்பதில் என்ன ஆச்சரியமிருக்கிறது ?

அப்பால் விடுமுறையில் தான் வீண்பொழுது போக்கினரா ? சிறிய பள்ளிக்கூட மொன்றுக்கு ஆசிரியராய் அமர்ந்தார். அப்பொழுதே அவரிடம் போதனாசக்தி மிகுந்திருந்தது.

பிறகு கார்பீல்டு வித்தியா பட்டம் பெற விரும்பி ஹைறாம் (Hiram) என்னுமிடத்திலுள்ள கல்விச்சாலையிற் சேர முயன்றார். அதற்குப் பணம் வேண்டுமே. அறுப்பு அறுக்கும் வேலை செய்து பணந்தேடிக்கொண்டு கல்விச்சாலையை யடைந்தார். அக்கல்விச் சாலையில் அதிகாலையில் மாணவர்கள் எழுந்திருப்பதற்காக மணியடிப்பதுண்டு. அவ்வேலையையும், கல்விச் சாலையைப் பெருக்கும் வேலையையும் கார்பீல்டு ஏற்றுக்கொண்டு அதனால் வரும் கூலியைக் கொண்டு சாப்பிட்டு வாசித்து வந்தார். சனி, ஞாயிறு முதலிய விடுமுறை நாட்களில் ஓய்வின்றி தச்சுவேலை செய்து பணந்தேடிக் கொள்வார். ஆ! கார்பீல்டு கல்வி கற்கவேண்டி எடுத்துக் கொண்ட பிரயாசைகள் என்னே! மணியடிப்பதும், பெருக்குவதும் ஒரு இழிவாக அவர் நினைக்கவே யில்லை. இவர் கல்வியிற் கரை கடந்த ஆவலுடையவரென்பதை கல்விச்சாலயதிபர் நன்கறிந்து வியந்து கார்பீல்டுக்கு அப்போதைக் கப்போது வேண்டிய உதவிகள் செய்து வந்தார். அக் கல்விச்சாலையிலும் கார்பீல்டு தான் முதன் மாணவர். மாணவர் நிலையிலேயே எத்தனையோ அரிய பிரசங்கங்கள் செய்து கல்வி நிபுணரையும் கலக்கும்படி செய்திருப்பது கார்பீல்டு சரித்திரத்தில் அறியவேண்டிய முக்கிய சங்கதி யாகும்.

இங்ஙனம் எந்த வேலையையும் இழிவென்று கருதாமல் அததில் சலியா உள்ளங்கொண்டு திறம்பட வேலைசெய்து சொந்த முயற்சியினாலேயே கல்வியையும் அபிவிருத்தி செய்து கொண்ட ஜேம்ஸ் கார்பீல்டு, 1881-ம்வருஷம் மார்ச்சு மாதம் 4-ந் தேதியில் அமெரிக்கா ஐக்கிய நகருக்குத் தலைவரானார்.

கார்பீல்டு சரித்திரத்திலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்ன ? எந்த வேலையையும் இழிவென்று கருதாமல்—மனஞ்சலிக்காமல் முயன்றால் முன்னுக்கு வரலாமென்பதே. சலியா முயற்சியுடன் முயலுக. மேன்மேல். மேன்மேல் முயலுக.

# "நாய்க்கடிக்குச் செருப்படி"

(பண்டித - வி. ராமசாமி.)

நெல்ல வாக்கு சொல்லடி !
நெல்ல வாக்கு சொல்லடி !
மலையாள பகவதி! நெல்லவாக்கு சொல்லடி!
ஜக்கம்ம தேவி! நெல்லவாக்கு சொல்லடி!
குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடுக்!
மதுர மீனாச்சி குடுகுடுக்!
கஞ்சி காமாச்சி குடுகுடுக்!
காசி விசாலாச்சி குடுகுடுக்!

"சரி ! சரி !! போடப்பா ! இந்நேரத்தில் என்ன ?" என்றாள் வாசலில் கோலம் போட்டுக் கொண்டிருந்த லீலாவதி.

"நெல்ல வார்த்தையே சொல்றேனம்மா ! நீ நெனச்சிருக்கிற காரியம் எனக்குத் தெரியுதம்மா ! பழுமோ காயோண்ணு சொல்றேனம்மா !

"அம்பிகே சொல்லடி! ஜகதம்பிகே சொல்லடி! குடுகுடு குடுகுடுக்

உன் மனசிலே இருக்கிற காரியம் ஆகுமோ ஆகாதோண்ணு சொல்றேனம்மா! நெல்ல வாக்கு சொல்றேன் கேளம்மா !

"சரிதான்! போ! போ!! போ என்று சொன்னால் ஒரு வார்த்தையில் போகமாட்டாய் போலிருக்கிறது."

"ஒரு பிடி அரிசி போடம்மா! என்னைப் பெத்த தாயே! மகாலச்சிமி! நூறு வருசம் நீ சுகமாய் இருக்கணும் மகாதாயே!"

இப்போது என்னப்பா அரிசி! ஒரு பக்கம் விடிந்தும் விடியாததற்கு முந்தி! தயாராய் வந்து விட்டாய் குடுகுடுப்பை ஆட்டிக்கொண்டு. நட! நட!! "உம்" என்று லீலாவதி சொல்லும்போது அந்தக் குடுகுடுப்பாண்டி புருவங்களை மேலேற்றிக் கண்களைக் கொஞ்சம் விசாலம் செய்து குடுகுடுப்பை ஆட்டிக்கொண்டே மறுபடியும் தொடங்கிவிட்டான்.

சுபகாரியம்! சுபகாரியம்!! சுபகாரியம் அம்மாதாயே சுபகாரியம்! உனக்கு இந்த வருசம் நெல்ல கலியாணம் நடக்கப் போகுது மகாலச்சிமி! அம்பிகே சொல்லடி! ஜகதம்பிகே சொல்லடி! நெல்லவாக்கு சொல்லடி! நெல்லவாக்கு சொல்லடி! குடுகுடு குடுகுடுக்!

இந்த வருசம் இந்த கலியாணம் தப்பாமல் நடக்குதம்மா தாயே! நெல்ல இடத்தில் பெரிய மாப்பிள்ளை வாராங்கோ என்னைப் பெத்த மகாலச்சிமி ஆதிலச்சிமி !

"என்ன! உன் மூஞ்சி! என்னடா உனக்கு வாய்க் கொழுப்பா? ஜாக்கிரதையாகப் பேசு"—என்றாள் லீலாவதி கொஞ்சம் நாணத்தோடும் பயத்தோடும் கோபத்தோடும்—

அதைக்கேட்ட, குடுகுடுப்பைக்காரன், குடுகுடுப்பை ஆட்டுவதை நிறுத்தி, லீலாவதியைக் கூர்மையாகப் பார்த்து இப்படிச் சொல்லுகிறான்:

"அம்மா! எனக்கு ஜோஸியம் தெரியும். உங்க மூகத்தே பாக்கும்போது, உங்களுக்கு இன்னும் கலியாணம் ஆகவில்லை யெண்ணும், இந்த வருசம் தப்பாமல் கலியாணம் ஆகுமென்னும், நெல்ல ஒழுங்கான மாப்பிள்ளை கிடைக்கு மென்னும் எனக்குத் தோணுது. வாஸ்தவமாய்......"

இந்த வார்த்தைகளைக் கேட்கும்போது லீலாவதிக்குச் சற்றே ஆலோசனை கிளம்பத் தொடங்கி விட்டது. சுற்று முற்றும் பார்த்து விட்டுத் தாமதம் செய்யாமல் இப்படிக் கேள்வி கேட்டாள்.

"என்னப்பா கோடாங்கி! உனக்கு ஜோஸியம் தெரியுமா?"

"தெரியாமல் என்ன அம்மா! செல்லாத் தெரியுந் தாயே."

"ஆனால் நீ இவ்வளவு நேரம் என்னைப்பற்றிச் சொன்னது எல்லாம் உண்மையாகுமா?"

"சந்தேகம் என் அம்மா? ஜாமகோடங்கி வார்த்தை தப்புமா தாயே. ஒரு ரெண்டணு வெள்ளிப்பணத்தே இந்த ஏட்டில் எங்கேயோ உங்க இஷ்டம்போல் போடுங்கோ. அப்போ நிஜம் தெரியுது"

உடனே லீலாவதி தன் இடுப்பில் செருகி வைத்திருந்த சிறியபட்டுப் பையை அவிழ்த்து, இரண்டணு வெள்ளிப் பணத்தை எடுத்து, ஏட்டில் ஒரு பக்கத்தில் வைத்தாள். பலே ஆசாமியான அந்தக் குடுகுடுப்பைக்காரன் பணம் வைத்த இடத்தை அப்படியே விரித்து, சிரித்துக் கொண்டே 'பாத்தீங்களா அம்மா! நான் சொன்னது எல்லாம் அவ்வளவும் நிஜமே. உங்களுக்கு இந்த வருசம், அநேகமா ஆவணி மாசத்துக்குள்ளேயே, கலியாணம் நடக்குது. நெல்ல, அழகான, படித்த மாப்பிள்ளை வாராங்கோ" என்றான்.

லீலாவதி கேட்டுக்கொண்டு சும்மா இருக்கிறாள்.

"அம்மா உங்க அதிஷ்டம். நீங்க கட்டிக்கிழிஞ்ச ஒரு பழைய துணிகிணி ஏதாவது கொடுங்க்கோனேன்; உங்களைப் பிடிச்ச பீடை எல்லாம் தொலையட்டும், உங்க புள்ளை யல்லவா நான். போறேன்."

"இந்தா அப்பா கோடாங்கி! இப்போது பழையதுணி ஒன்றும் இல்லை. இன்னொரு நாளைக்குத் தருகிறேன். இப்போது இந்தப் பணத்தை வாங்கிக்கொண்டு போ" என்று மறுபடியும் இரண்டணுப் பணத்தை எடுத்து அவனுக்குக் கொடுத்தாள். அவன் அதை வாங்கிக்கொண்டு—"என் தாயி, என் அம்மா, நெல்ல மகராசி, என் லச்சிமி. என்னைப் பெத்ததாயீ குங்குமம், புஷ்பம், மஞ்சளோட ஆயிரம் வருசம் தீர்க்காயுஸோடு வாழணும் முருகையா!' என்று வாழ்த்திக் கொண்டே புறப்பட்டுப் போனான்.

2

திருவேங்கடம் பிள்ளை பெரிய தனவந்தர். ஊருக்குள் நல்ல செல்வாக்கு உள்ளவர். வருஷத்தில் அவருக்கு சுமார் 25, 30 ஆயிரம் ரூபாய் வருமானம். நல்ல தயாள குணம் படைத்தவர் என்ற பேரும் அவருக்கு உண்டு. அவருடைய மனைவி இறந்து வெகு காலம் ஆகிவிட்டது. ஆனால் மறுபடியும் கலியாணம் செய்துகொள்ளாமல் ஒரே மகளான லீலாவதியை மிகுந்த பிரியத்தோடு செல்லமாய் வளர்த்து வருகிறார். லீலாவதி என்றால் திருவேங்கடம் பிள்ளைக்கு உயிர், லீலாவதியைப் பார்த்துப் பார்த்து தம்முடைய அருமை மனைவி இறந்த துக்கத்தையும் மறந்து பூரித்துப் போவார். எந்த விஷயத்திலும் லீலாவதி முகம் கொஞ்சங் கோணினாலும் அவர் சகிக்க மாட்டார். அவருக்கும் உடனே அழுகை வந்துவிடும். இந்தமாதிரி புஷ்பங்களுக்குள் வைத்து வளர்த்து வருகிறார். லீலாவதிக்குக் கலியாணப் பருவம் வந்தது. நல்ல மருமகனைத் தேடவேண்டும் என்ற ஆசை திருவேங்கடம் பிள்ளைக்கு மனதுக்குள் இருந்தாலும் முதலில் தம்முடைய மனைவிக்குத் தாம் கொடுத்திருந்த வாக்குத்தத்தம் ஞாபகத்திற்கு வந்தது. அதுவும் அல்லாமல் 'இவ்வளவு ஆஸ்தியும் எவனோ அந்நியனுக்கு ஏன் போக வேணும்? நமக்குள்ளேயே இருந்து போகட்டுமே—தாய் மாமனாயிருந்தால் என்ன? நாராயணனுக்கே கொடுத்து விட்டால் போகிறது' என்றும் நினைத்துக் கொண்டிருந்தார்.

தம்முடைய மனைவியின் உடன் பிறந்த சகோதரன் நாராயணன் இன்டர்மீடியட் வரை படித்திருக்கிறான். நல்ல நிலைமையில் உள்ளவனே. அவ்வளவு அழகுள்ளவன் என்று சொல்ல முடியாது. ஆனால் அவலட்சணம்—விகாரமானவன் என்று நினைத்து விடாதீர்கள். ஒரு சாதாரணப் பேர்வழி; அசடு அல்ல. மிகவும் சுபாவஸ்தன்—நல்லவன். திருவேங்கடம் பிள்ளை வீட்டில் சம்பந்தம் செய்யும் அந்தஸ்து அவனுக்கு அவ்வளவாக இல்லாவிட்டாலும், அவனுடைய அதிருஷ்டத்தால், திருவேங்கடம்பிள்ளை லீலாவதியை அவனுக்கு முடித்து விடலாம் என்று தீர்மானித்தார். லீலாவதிக்கும் அது இஷ்டந்தான். நாராயணனும் லீலாவதியும் சிறுவயதில் வெகு காலம் ஒரே இடத்திலிருந்து வளர்ந்து வந்தவர்கள்.

சித்திரை மாதத்தில் முகூர்த்தம். இப்பொழுதே வேலைகள் பெரும் பாகம் முடிந்துவிட்டன. முகூர்த்தம் சரியாக ஒரு மாதங்கூட பூராவாக இல்லை. எல்லாம் நன்றாகவே இருக்கின்றன. ஆனால் இப்போது யாரும் எதிர்பாராத வகையில் ஒரு பெரிய முட்டுக்கட்டை வந்து விழுந்தது. லீலாவதி வாசலில் கோலம் போட்டுக்கொண்டிருக்கும்போது, எவனோ ஒரு குடுகுடுப்பாண்டி வந்து, யாரும் எதையும் சொல்லிக் கொடுக்காமலே, அவளுக்கு இந்த வருஷம் நிச்சயமாய்க் கலியாணம் நடை பெறப்போகிறது என்று சொல்லிவிட்டான். அந்தச் சங்கதியைக் கேட்கும் போது, அவன் யாரோ ஒரு நல்ல தேவதூதன் என்று நினைத்துக்கொண்டு லீலாவதி மறுபடியும் சில கேள்விகளைக் கேட்டாள். "நல்ல, ஒழுங்கான, படித்த, பெரியவீட்டு மாப்பிள்ளை வரப்போகிறார்" என்று குடுகுடுப்பாண்டி சொன்னான். அந்த வார்த்தைகள் லீலாவதியின் இருதயத்தில் ஊடுருவிப் பாய்ந்து விட்டன. அவனுடைய வார்த்தைகளில் அவளுக்கு எப்படியோ முழுநம்பிக்கை. அவனுடைய வார்த்தைகள் வாஸ்தவமானால் நாராயணன் மாப்பிள்ளை ஆகப்போவதில்லை

என்று அருத்தம். "அவன் அவ்வளவு அழகானவனும் அல்ல, அவ்வளவு படிப்பாளியும் இல்லை. அந்த தேவதூதன்—குடுகுடுப்பாண்டி சொன்னது மூக்காலும் உண்மை" என்று லீலாவதி உறுதியாகத் தீர்மானித்துக்கொண்டிருக்கிறாள்.

அவனுடைய வார்த்தை எப்போதாவது பலித்தே தீரப்போகிறது. அப்படியிருக்க, அவசரப்பட்டு இந்தத் தாய் மாமனைக் கட்டிக்கொள்ளுவது ஏன்? என்று லீலாவதி ஆலோசனை செய்தாள். ஆலோசனையின் மீது ஆலோசனைகள் அவளுடைய மனதைக் கந்தரகோளப் படுத்திக்கொண்டிருந்தன. என்ன செய்வாள்? முதலிலேயே தகப்பனாரிடம் "சரி" என்று வாக்குக் கொடுத்துவிட்டாள். காரியங்களும் தடபுடலாக நடந்துகொண்டிருக்கின்றன. லீலாவதிக்கு நாராயணன்தான் மாப்பிள்ளை என்று ஊரெல்லாம் வெகு நாட்களாகப் பேசிக்கொண்டு வருகிற விஷயமும் எல்லாருக்குந் தெரியும். சிறுவயதிலிருந்து கஷ்டப்பட்டு—உயிருக்கு உயிராகப் பாவித்து நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்துப் பெரியவளாகச் செய்த தகப்பனார் கருத்துக்கு மாறாக அவள் நடந்துகொண்டால் உலகம் என்ன சொல்லும்? சரி, இந்த உலகத்துக்குப் பயந்து வாயெடுக்காமல் தாய் மாமனையே கட்டிக்கொண்டால் அந்தக் கோடாங்கியின் வார்த்தைகள் அடிக்கடி ஞாபகத்திற்கு வந்து வாழ்க்கை முழுவதையும் துக்க மயமாக்கிவிடுமே. போகட்டும் அதற்காக இந்தச் சம்பந்தம் வேண்டாம் என்றால் நாராயணன் கதி என்ன? அவர்கள் இரண்டுபேரும் பாலியப் பருவத்தில் செய்த சேஷ்டைகள், விளையாடிய விளையாட்டுகள், நினைத்த நினைப்புகள், பேசிய பேச்சுக்கள் எல்லாம் என்ன ஆவது? சிறு வயதிலிருந்தே நாராயணன் லீலாவதியின் மீது ஆசைவைத்துக்கொண்டிருக்கிறான். அப்பேர்ப்பட்டவனை இப்போது ஏமாற்றம் அடையும்படி செய்தால் என்ன நன்றாயிருக்கும். இது என்ன ஒழுங்கு? அந்தக் கடப் பாவம் வேறு வேண்டுமோ?—இதற்காகத்தானா லீலாவதி தன் வாழ்க்கையில் ஒரு பெரிய களங்கம் உண்டாக்கிக் கொள்ளப்போகிறாள். சரி, இதைப்பற்றி நாம் யோசித்து என்ன செய்யக்கூடும். மேல் சங்கதியைக் கவனிப்போம். ஆனால் அவளுக்கு ஒன்றும் தோன்றவில்லை. உதவியாகச் சமாதானம் சொல்லுகிறவர்களும் ஒருவரும் இல்லை. அநேக தடவை, அநேக விதமாகத் தானே திருப்பித் திருப்பி ஆலோசனை செய்தாள். பிறகு ஒரே முடிவாகத் தீர்மானித்து விட்டாள். தைரியமாகவும், உறுதியாகவும் எல்லாவற்றையும் தகப்பனாரிடம் சொல்லிவிட்டாள்.

அப்போதுதான் நாராயணன் வெளியில் உலாவப் போய்விட்டுவந்து வீட்டுத் தோட்டத்தில் சிறு நடை நடந்துகொண்டே காற்று வாங்கிக்கொண்டிருக்கிறான். சில மனோரஞ்சிதப் புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு இவைகளை லீலாவதிக்குக் கொடுத்தால் நன்றாயிருக்கும் என்று ஆலோசிக்கும்போது "நாராயணா! நாராயணா!!" என்று திருவேங்கடம் பிள்ளை உள்ளேயிருந்து அழைத்தார். அந்த மலர்களை அங்கேயே வைத்துவிட்டு அவரிடம் போனான். திருவேங்கடம் பிள்ளை வாயிலில் வந்து நின்றுகொண்டிருந்தார். நாராயணன் வந்ததும், அவன் முகத்தைப் பார்த்துவிட்டுச் சும்மா இருந்தார். அப்போது அவருடைய முகத்தில் கொஞ்சம் விசனக் குறிகள் காணப்பட்டன. அதைக் கண்டு நாராயணன் "ஏன் இப்படி இருக்கிறீர்கள்" என்று கேட்டான். உடனே திருவேங்கடம் பிள்ளை

மனதைத் திடப்படுத்தி தைரியம் செய்துகொண்டு "நாராயணா! உன்னிடத்தில் மிகவும் கடினமான ஒரு சங்கதியைச் சொல்ல வந்தேன். ஆனால் சொல்ல மாத்திரம் வாய் எழவில்லை" என்றார்.

"பரவா இல்லை சும்மா சொல்லுங்கள்."

"உனக்கு அசுபம்..............." என்று சந்தேகத்தோடு வெளியில் கிளப்பினார்.

"பாதகம் இல்லை; பூர்த்தியாகச் சொல்லுங்கள்."

"அதாவது, லீலாவதி உன்னைக் கலியாணம் செய்துகொள்ளமாட்டாளாம்!"—என்று சொல்லிவிட்டு ஒரு வெறித்த பார்வை பார்த்தார்.

நாராயணன் மிகவும் சாதாரணமான தோரணையில் "ஏன்" என்றான்.

"ஏன் என்றால் என்ன சொல்ல? அவள் தலைச் சனியன் என்ன சொன்னாலும் கேட்கவில்லை. நயத்திலும் பயத்திலும் பல விதத்திலும் சொன்னேன்; ஆனால் ஒன்றும் பயன்படவில்லை. காரணம் வெளிப்படையாக ஒன்றும் சொல்லமாட்டேன் என்கிறாள். அவளுக்கு அப்படித் தோன்றியிருக்கிறதாம். அம்மா! தாயே என்றுகூடக் கெஞ்சிப் பார்த்தேன். ஊர் சிரிக்கும், நாடு சிரிக்கும், நன்றாயில்லை, எவ்வளவோ பணம் இப்போது வீண் நஷ்டமாகும், பிடிவாதம் வேண்டாம் என்று எவ்வளவு சொல்லியும் பிரயோஜனப்படாமற் போய்விட்டது. "நான் செய்துகொள்ள மாட்டேன்" என்று ஒரே அடியாகப் பிடிவாதமாய்ப் பதில் சொல்லிவிட்டாள். தாயில்லாப் பெண்; அவளுடைய மனமும் எங்கே நோகுமோ என்று நானும் கொஞ்சம் தயங்கவேண்டியிருக்கிறது. என்ன செய்யலாம். தொலைகிறாள் அவளுடைய கருமம் அவளோடு......................"

"ஆனால் வேறு காரணம் ஒன்றும் இல்லையா?"

வேறு என்ன இருக்கிறது? அவளுடைய மனம் அப்படிச் சொல்லுகிறதாம். போகட்டும், நீயுங்கூட அவளோடு ஒரு தடவை கலந்து பேசிப் பார். ஏதாவது பிரயோஜனப்படுமா என்று பார்க்கலாம."

"அப்பப்ப! வேண்டவே வேண்டாம். இந்த விஷயத்தில் நானும்போய் இன்னும் அதிகப்படியான மானக்கேடு உண்டாக்க விருமபவில்லை. என் வழியை நான் பார்த்துக்கொண்டு போகிறேன். ஆனால் லீலாவதி எனக்குச் செய்த துரோகத்தை மாத்திரம் நான் எந்தக் காலத்திலும் மறந்துவிடப்போவதில்லை..........." என்று சொல்லிக்கொண்டே புறப்பட்டுப் போக எழுந்தான்.

"நாராயணா! அப்பனே! நான் என்னடா செய்யட்டும் ஐயா! இவ்வளவு பிடிவாதக்காரி என்று நான் எப்போதும் நினைக்கவே இல்லை. எங்கள் வம்சத்துக்கே களங்கம் தேடுவது போல் இருக்கிறது......"போகட்டும் நீ........" என்று திருவேங்கடம் பிள்ளை இன்னும் ஏதேதோ சொல்லிக்கொண்டிருக்கும்போதே, நாராயணன் செவி சாய்க்காமலும், திரும்பிப் பார்க்காமலும புறப்பட்டு விட்டான்.

3

சங்கதிகள் எல்லாம் சரியாக இருந்தால் கலியாணம் நடக்கவேண்டிய நாள் அது. விஷயம் ஞாபகத்துக்கு வந்துவிட்டதனால் திருவேங்கடம்பிள்ளை

மிகுந்த விசாரத்தோ டிருந்தார். இந்தச் சமயத்தில் பக்கத்து வீட்டு பத்ம நாபபிள்ளை தம்மோடு ஒரு வாலிபனைக் கூடவே அழைத்துக் கொண்டுவந்து "என்ன மாமா! நீங்கள் உங்கள் காரியங்களை எல்லாம் மேற்பார்க்க யாராவது ஒரு ஆள் தேவை என்று நான்கு நாளைக்கு முன்பு சொன்னீர்கள் அல்லவா? இதோ பார் இவர் வந்திருக்கிறார்........." என்று அந்த வாலிபனைச் சுட்டிக்காட்டினார். அருமையான செவந்த சரீரம். தலையில் கருத்து அடர்ந்த மயிர்—பெரிய மூடி. விசாலமான கண்கள். மிருதுவான அழகொழுகும் முகம். நெற்றியில் சிறு சாந்துப்பொட்டு. பார்க்கும் போதே மிகுந்த மகிழ்ச்சி பொங்கி விட்டது திருவேங்கடம் பிள்ளைக்கு. விசாரத்தை எல்லாம் அடக்கிக்கொண்டு அந்த வாலிபனைச் சில விஷயங்கள் கேட்டார்:

"உங்கள் பேர்?"

"துரைராஜன்"

"வயது?"

"இருபத்தைந்து"

"எதுவரை படித்திருக்கிறீர்கள்?"

"பி. ஏ. பாஸ் செய்திருக்கிறேன்"

"கலியாணம் ஆயிருக்கிறதா?"

"இல்லை"

பி. ஏ. பாஸ் செய்திருக்கிற நீங்கள் இந்த மாதிரியான வேலைகளுக்கு வருவான் ஏன்? ஏதாவது நல்ல உத்தியோகம்......"

"இந்தக் காலத்தில் எந்த நல்ல உத்தியோகத்திற்குப் போகிறது? பரவாயில்லை, எதுவா யிருந்தால் என்ன? காரியங்களை எல்லாம் உங்களுக்கு மிகுந்த திருப்தி உண்டாகும்படியே நடத்துவேன்"

"சரிதான்! நீங்கள் எங்கள் வீட்டிலேயே இருந்து, எங்களோடு ஒன்றாகவே சாப்பிட்டுக்கொண்டு எங்கள் காரியங்களைப் பார்த்துக்கொண்டு வாருங்கள். மேலே இன்னும் ஏதாவது சேர்த்துத் தருகிறேன்.

"சரி அப்படியே உங்கள் இஷ்டம்போல் செய்யுங்கள். இந்த ஏற்பாடு நன்றாகவே இருக்கிறது. எனக்கும் வேறு யாரும் திக்கில்லை. நல்ல ஆலோசனையே சொன்னீர்கள்" என்று துரைராஜன் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தான்.

சில நாட்களில் துரைராஜன் வீட்டுக்காரர்களில் ஒருவன் ஆகி விட்டான். அவன் செய்ய வேண்டிய காரியங்களை எல்லாம் வெகு சிரத்தையாகச் செய்து வருகிறான். வீட்டுக்காரியங்கள் எல்லாம் ஒழுங்கு செய்யப்பட்டு நன்கு விருத்தியாகிக்கொண்டு வருகின்றன. துரைராஜனுடைய ஜாக்கிரதையினாலே, இதனாலே, திருவேங்கடம் பிள்ளைக்கு அவன் மீது ஒருவிதமான அன்பும் மதிப்பும விசேஷமாக ஏற்பட்டுவிட்டன. "அவனுக்கு இன்னும் கலியாணம் இல்லை அல்லவா? நம்முடைய மருமகனாகவே செய்து கொண்டால்......" என்று திருவேங்கடம்பிள்ளை எப்போதாவது ஒவ்வொரு சமயம் நினைத்துக்கொள்ளுவதுண்டு. ஆனால் இந்த விஷயத்தைக் குறித்து என்றும் யாரோடும் பேசியதில்லை.

தன் காரியம் என்ன உண்டோ அதைச் செய்துவிட்டு துரைராஜன், ஏதாவதொரு புஸ்தகத்தை எடுத்து வாசித்துக்கொண் டிருப்பது வழக்கம். அவனிடத்தில் எல்லாம் அளவாகவே இருக்கும். மிதமான பேச்சுக்காரன். புதியவர்களிடம் சுத்தமாகப் பேசவே மாட்டேன். வீட்டுக்காரரோடு வெட்கம். ஊரில் யாரோடும் பழக்கமில்லை. ஆனால் அவன் தெருவழியே போய்க் கொண்டிருந்தால் கலியாண மாகாத பெண்கள் எல்லாரும் சும்மா அவனேயே பார்ப்பார்கள். ஆனால் அவர்கள் தங்கள் மனங்களுக்குள்ளே ஏதாவது நினைத்துக் கொள்ளுவார்களோ என்னவோ எமக்குத் தெரியாது.

4

துரைராஜன் தங்கள் வீட்டில் கால்வைத்து மானேஜ்மெண்ட்டை ஒப்புக்கொண்டு வேலைபார்த்து வருகிற நாளிலிருந்து, லீலாவதிக்கு அவன் மீது ஒரு தினுசான பிரியம் உண்டாகி விட்டது. அந்தக் குடுகுடுப்பாண்டி சொன்ன மாப்பிள்ளை இவன்தானே என்று முதலில் ஐயம் பிறந்தது. இவனேதான் சந்தேகம் இல்லை என்று உடனே உறுதிசெய்துகொண்டாள். ஆமாம் "நல்ல, ஒழுங்கான, படித்த........." என்று சொன்னான் அவன். இவையெல்லாம் துரைராஜனிடம் பொருந்தி யிருக்கின்றன. இவனே தன் காதலனாயிருக்க வேணும் என்று லீலாவதி தன்னுடைய மனதில் நினைத்துக் கொண்டாள். ஆனால் இந்த விஷயத்தைத் தன் தகப்பனாரிடம் தானே சொன்னால் நன்றாயிருக்காது என்று சும்மா இருந்தாள். எல்லா விஷயங்களுக்கும் முதலில் பீடிகை வேண்டு மல்லவா? மெல்ல துரைராஜனோடு பேச்சு வார்த்தை வைக்கத் தொடங்கினாள் லீலாவதி. ஆனால் அவன் சுருக்கமாய்—தெளிவாய்—அளவாகவே பேசுவான். கேட்பதுக்குப் பதில் கொடுப்பான்; அவ்வளவே. லீலாவதிக்கு வசப்படுவான் என்று தோன்றவில்லை. அவனோடு குஷாலாய்த் தமாஷ் பேசவேண்டும் என்று லீலாவதி எத்தனையோ முறை முயற்சி செய்து பார்த்தாள். நடக்க வில்லை.

துரைராஜன் திருவேங்கடம்பிள்ளை வீட்டிலேயே சாப்பிட்டுக் கொண்டு, அங்கேயே உறங்குவது வழக்கம். சாதாரணமாக எப்போதும் லீலாவதி அவனேயே பார்த்துக்கொண்டிருப்பாள். எவ்வளவு பார்த்தாலும் லீலாவதிக்கு அவனுடைய அழகு தெவிட்டுவதில்லை. துரைராஜனுடைய புன்முறுவல் தவழும் முகமும், எழில் நலங்கனிந்த வடிவமும், லீலாவதியின் மனதில் காதலைப் பெருக்கி உருக்கிக்கொண் டிருக்கின்றன. அவன்மீது அவளுக்கு நாளுக்கு நாள் அன்பும் காதலும் அதிகரித்து விட்டன. ஆனால் அவன் மாத்திரம் இந்த விஷயத்தை நினைக்கக் கூடியவனாயில்லை. காதல் என்றால் என்ன என்று தெரியாதவனைப் போலவே நடித்து வருகிறான். என்றாலும் லீலாவதிக்கு அவன்மீது ஆசை விட்டுப்போகவில்லை. ஏதாவது ஒரு சாக்கு வைத்துக்கொண்டு அவனைப் பேசச்செய்து விடுவாள். அப்பொழுதும் பேச்சுக்குப் பேச்சு—அளவாகத்தான் பதில் கொடுப்பான் கண்ணெடுத்துப் பாராமல். துரைராஜன், தன்னை மதிக்கவில்லை, தன்மீது காதல் கொள்ளவில்லை என்ற விஷயத்தைத் தெரிந்து, லீலாவதி, பாவம் நீராய்க்கரைகிறாள். ஆனால், அவள் இனி என்னதான் செய்வாள்?

இப்படி ஒருமாதம் கழிந்தது. நமது லீலாவதிக்குக் கொஞ்சம் நம்பிக்கையில் தளர்ச்சி ஏற்பட்ட போதிலும் அவ்வளவுக் கவ்வளவு காதல் வெள்ளம் பொங்கிப்புரண்டு பெருக்கெடுத்து ஓடிக்கொண்டுதான் இருந்தது.

முன்பு எப்பொழுதோ குடுகுடுப்பாண்டி சொல்லிவைத்த ஜோஸியம், அநுதினமும் அவளுடைய காதுகளில் வந்து ஒலித்துக்கொண்டே இருக்கிறது. அவளுடைய கண்களுக்கு எதிரில் அதுவே பிரத்தியக்ஷக் காட்சியாய் விழுந்துகொண் டிருக்கிறது. "இதோபார் துரைராஜன், நான் இதுவரை சொல்லிக்கொண் டிருந்த மாப்பிள்ளை, இதோ பார்! இதோபார்!" என்று அந்தக் குடுகுடுப்பாண்டி குடுகுடுப்பையை ஆட்டிக்கொண்டே சொல்லுவது போல் அவளுக்குத் தோற்றம் அடிக்கடி உண்டாய் விடும். ஆனால் துரைராஜன் மாத்திரம் ஒன்றும் அறியாதவனைப் போலவும், எதிலும் சம்பந்தப் படாமலும் காலங்கழித்து வருகிறான். லீலாவதிக்கு மேலும்மேலும் வேதனை வளர்ந்து கொண்டே இருந்தது; அவளுக்குள் எழுந்த காதற்பெருக்கும் கட்டுக் கடங்காமல் கரைகளை உடைத்து விடக்கூடிய நிலைமையில் வந்துவிட்டது.

ஒரு நாள் சாப்பாட்டுக்குப் பிறகு தன் சங்கதி யெல்லாம் தந்தையின் காதில்மெல்ல நுழைத்தாள். இந்த யோசனை திருவேங்கடம்பிள்ளைக்கு துரைராஜனைக் கண்டபோதே உண்டானது அல்லவா? ஆனால் மகள் மனம் எப்படி யிருக்குமோ என்று பேசாமல் இருந்து விட்டார். இப்போது அவளுக்கே இஷ்டம் உண்டாகி விட்டது. இதனால் திருவேங்கடம் பிள்ளைக்கு மிகுந்த மகிழ்ச்சி பொங்கி விட்டது. அத்தகைய—ஒழுக்கமான—விநயமுள்ள—நற்குணம் வாய்ந்த—கற்றுத்தேர்ந்த கட்டழகன் தமக்கு மருமகனாக வருகிற விஷயத்தை நினைத்து நினைத்து பூரித்துப்போனார். இதைக் குறித்து துரைராஜனோடு சம்பாஷிக்க வேண்டும் என்று உறுதி செய்து கொண்டார். இரவு சாப்பாடு முடிந்த பிறகு திருவேங்கடம் பிள்ளையும் துரைராஜனும் வாசல் திண்ணையில் வெற்றிலைபாக்குப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள். ஏதேதோ பேசிக்கொண்டிருந்து விட்டு, அப்படியே பேச்சோடு பேச்சாய் திருவேங்கடம் பிள்ளை, துரைராஜனுடைய கலியாண விஷயத்தை இழுத்தார். அதற்கு அவன் சொல்லுகிறான்.

"கலியாணத்துக்கு என்ன வந்தது? எங்கேயாவது நல்ல சம்பந்தம் வந்தால் நடக்காமல் போகிறதா?"

"ஆனால் இப்போது கலியாணத்துக்குத் தயாராய் இருக்கிறீர்கள் என்று சொல்லுங்கள்!"

"உங்களிடம் வந்து ஒரு மாதங்கூடச் சரியாக ஆகவில்லை. இப்போது கலியாணம் நடந்தால் உங்களை விட்டுப் போகவேண்டி நேரிடும். அது எனக்கு இஷ்டம் இல்லை..........."

"என்னை எப்படி விட்டுப் பிரிவீர்கள்?"

"ஆமாம்! நான் தனியாகக் குடும்பம் நடத்தினால்?"

"தனிக்குடும்பம் இல்லாமல் எங்கள் வீட்டிலேயே இருங்கள்"

"அதெப்படி முடியும்?"

"எப்படி, என்ன? எங்கள் வீட்டு மாப்பிள்ளையானால் சரி."

"அதென்னமோ, நீங்கள் சொல்லுவது எனக்குச் சரியாக விளங்கவில்லை."

ஒன்றும் இல்லை. எங்கள் லீலாவதியையே உங்களுக்கு முடித்து விடலாம் என்பது என்னுடைய எண்ணம். அவளுக்கும் அது இஷ்டமாகவே இருக்கும். ஆகலாலே நீங்கள் விரும்பினால் கலியாணத்தை நடத்தி விடுகிறேன்......"

துரைராஜனுக்குப் புன்முறுவல் வாயைத்துளைத்தது; ஆனால் வெகு சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான். உடனே ஆலோசனையில் ஆழ்ந்து சிறிது நேரம் மௌனமாய் இருந்தான்.

திருவேங்கடம் பிள்ளை கேட்கிறார் அப்பொழுது—"என்ன துரைராஜ்! இவ்வளவு ஆலோசனை எதற்கு, சரி யென்றால் ஆகிவிடக் கூடிய காரியத்துக்கு? சுபம்; என்ன சொல்லுகிறீர்கள்?

நான் என்ன சொல்லுவதற்கும் சக்தி இல்லாதவன். இங்கிருந்து சுமார் ஐந்தாறு மைல் தூரத்தில் எங்கள் உறவினர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய சம்மதத்தையும் கேட்டு உங்களுக்கு முடிவு சொல்லுகிறேன்" என்றான் துரைராஜன்.

"சரி! அப்படியே செய்யுங்கள்" என்று தலை அசைக்கிறார் திருவேங்கடம் பிள்ளை. விடியற்காலம் நேரத்தில் எழுந்து, துரைராஜன், தன்னுடைய உறவினர் வீட்டுக்குப் பயணமானான். மறுபடியும் திரும்பி நாலு மணிக்கு வருவேன் என்று சொன்னான்.

5

துரைராஜன் புறப்பட்டதிலிருந்து லீலாவதியும் தகப்பனாரும் மிகுந்த சந்தோஷத்தோடு இருக்கிறார்கள். அவன் திரும்பிவந்து 'சரி" என்றே சொல்லுவான் என்று மகிழ்ந்து பூரித்துப் போய்விட்டார்கள். சாயங்காலம் ஆயிற்று. திருவேங்கடம் பிள்ளை வாசல் திண்ணையில் திண்டு வைத்துச் சாய்ந்திருக்கிறார். லீலாவதி நல்ல உயர்ந்த தினுசு பனாரஸ் பட்டுப் புடவை உடுத்தி, விலையுயர்ந்த ஆபரணங்கள் தரித்து, நெற்றியில் சாந்துப் பொட்டு இட்டு, ஜோராக அலங்காரம் செய்து கொண்டு, மோஹன கர்வம் தாண்டவமாட, 'ஜில்" லென்று விளங்குகிறாள். இதோ வந்து விட்டார், அதோ வந்து விட்டார் என்று சொல்லிக்கொண்டே காலங்கடத்திக் கொண்டிருக்கிறார்கள் அப்பனும் மகளும். இதற்குள் ரஸ்தாவுக்குப் பக்கத்தில் துரைராஜன் தென்பட்டான். அவனோடு கூட யாரோ பெண் ஒருத்தி இருக்கிறாள். அவர்களுக்கு முன்னால் சிறிய இங்கிலீஷ் கைவண்டியில் ஒரு குழந்தையை உட்காரவைத்து ஒருவேலைக்காரன் இழுத்துக்கொண்டு வருகிறான், "அநேகமாய் அந்தப்பெண் துரைராஜனுக்கு நெருங்கிய பந்துவாயிருக்கவேணும்; பெண்ணைப்பார்ப்பதற்காகவே வருகிறாள்" என்று பேசிக்கொண்டார்கள் திருவேங்கடம் பிள்ளையும் லீலாவதியும். அவர்கள் இதற்குள் வீட்டுக்குப் பக்கத்தில் நெருங்கி விட்டார்கள். அவர்களை எதிர்கொண்டு அழைத்து உபசரித்து உட்காரச்சொன்னார் வீட்டுப் பெரியவர். எல்லாரும் கூடத்திற்குப் போய் விசாலமான அழகிய ரத்தின கம்பளத்தில் உட்கார்ந்தார்கள். துரைராஜனும் திருவேங்கடம் பிள்ளையும் ஒரு பக்கத்திலும், லீலாவதியும் புதிதாக வந்த பெண்ணும் ஒரு பக்கத்திலும் சேர்ந்து உட்கார்ந் திருந்தார்கள்.

"என்ன துரைராஜ்! நீங்கள் போயிருந்த காரியம் என்ன ஆயிற்று?" என்று திருவேங்கடம் பிள்ளை சம்பாஷணையை ஆரம்பித்தார்.

துரைராஜன் பலே வேலைத்தனம் அடங்கிய குறுஞ்சிரிப்புச் சிரித்துக் கொண்டே "அவளைக்கேளுங்கள்" என்று பதில் கொடுத்துவிட்டு அந்தப் பெண்முகத்தைப் பார்த்தான்.

"ஆனால் அந்த அம்மாள் உங்களுக்கு என்ன ஆகவேணும்?"

"அவளா— என் மனைவி, ருக்குமணி. அந்தச்சிறு குழந்தை என் மகள் ராதை."

திடீரென்று எதிர்பாராத விதமாய் ஏற்பட்ட ஏமாற்றத்தால்— ஆசா பங்கத்தால் லீலாவதி பெருமூச்சுவிட்டு வெலவெலத்துப்போய் தந்தை கைகளிற் சேர்ந்தாள். அந்த நெருக்கடியான சமயத்தில்—அந்த துக்கமயமான அவஸ்தையில்—அந்தச் சிறந்த உத்கிருஷ்டமான முகூர்த்தத்தில் "லீலாவதி! மோசம் செய்வதால் நேரும் துக்கம் எத்தகையது என்று தெரிகிறதா? நீ செய்த துரோகத்துக்கு இது பிரதி துரோகம். இந்தக் கபட நாடகத்துக் கெல்லாம் நானே சூத்திரதாரி. இப்போது எந்தக் குடுகுடுப்பாண்டி வருவானோ வரச் சொல. குறுக்கே—" என்று சொல்லிக் கொண்டே எங்கிருந்தோ நாராயணன் வந்து எல்லாரும் ஆச்சரியப்படும் வகையில் வளாசினன்.

---

## நமது அநுதாபம்

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகையில் பல ஆண்டுகளாக தொடர்ச்சியாக இனிய கட்டுரைகள் எழுதி வாசகர்களை மகிழ்வித்து வந்த பெரியார் ஸ்ரீ. சிவானந்தசாகர யோகீஸ்வரர் அவர்கள் சின்னாட்களுக்கு முன்னர் காலஞ் சென்று விட்டமையை அறிந்து மிகவும் வருந்துகிறோம். அவர்களுடைய பிரிவாற்றாமைக்கு வருந்தும் குடும்பத்தாருக்கு எமது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். ப-ர்.

## குருவும் சீடனும்

சிஷ்யன். பரம குருவே! நேற்று "எல்லாம் மித்தை; மித்தையைக் கண்டு பயப்படலாகாது" என்றீர்களே! இன்று ஏன் யானையைக் கண்டு ஓடுகிறீர்கள்?

குரு. அப்பா! நான் ஓடியதும் மித்தை தான்.

# ஐயவினு விடை.

## ஐந்தில் இரண்டு பழுதில்லை.

"ஐந்தில் இரண்டு பழுதில்லை" என்ற பழமொழிக்குப் பொருள் விளக்கவேண்டும் என்று நண்பர் S. N. சின்னையா பிள்ளை அவர்களும், "அறிவைப் பரீக்ஷிக்கும் சொற்கள்" என்று தலைப்பீந்து 1. போய் வருபவை இரண்டு, 2. போனல் வாராதவை இரண்டு, 3. எப்பொழுதும் இருப்பவை இரண்டு என்பவைகளை விளக்கவேண்டும் என்று எட்டையபுரம் நண்பர் K. சாமிநாதன் அவர்களும் எமக்கு ஐயவினுக்கள் விடுத்துள்ளார்கள். அவற்றிற்கு நமது தமிழ்ப்பண்டிதர் ஆ. கமலநாத முதலியாரவர்கள் கொடுத்துள்ள விடைகள் வருமாறு:—

தங்கள் நாயகரையே தெய்வமாகக் கருதும் பெண்களின் சொற்படியே தெய்வமும் நடக்கும். மழையும் பெய்யும். இக் கற்புடைய மங்கையர்கள் தங்கள் நாயகன் இறந்த மாத்திரத்தில் இடியோசை கேட்ட சர்ப்பத்தைப் போலத் தம் முயிர் நீங்குவர். இதற்குச் சான்றாக சூரபதுமனுடைய மனைவியாகிய பதுமகோமளை யென்பாள் தன் நாயகன் இறந்தான் என்னும் சொல் காதிற் புக்கபோதே உயிர் நீங்கினள். இச் செய்கை தலையன்பின்பாற் பட்டது. தன் நாயகர்கள் தரித்திர முடையவர்களாயினும் தீக்குண முடையோராயினும், கிழவராயினும், நோயாளர்களாயினும், அழகில்லாதவராயினும், அவயவமில்லாதவராயினும், வஞ்சக மூடர்களாயினும் அவர்கள் மாட்டு அதிக விருப்ப முடையவர்களாகவே யிருப்பார்கள். கொழுநன் புசித்த பின் புசித்தலும், நாயகர் தூங்கின பிறகு தாம் தூங்குதலும் அவர்கள் படுக்கையை விட்டெழாததற்கு முன்னே எழுந்திருத்தலும் அவர்கள் மனையிலுள்ள காலத்தில் அணி முதலியவைகளை அணிதலும் அவர்கள் வெளியே போன காலத்தில் நகை முதலானவைகளை அணியாதிருத்தலும், நாயகர்கள் துன்புறுங் காலத்தில் துன்புறுதலும் உரல், அம்மி, உலக்கை, வாயிற்படி, முறம் இவற்றின் மீது உட்கார்ந்தால் திருவகன்றிடுமென்று நினைத்து உட்காராத தன்மையையும் அடையப் பெற்றிருப்பார்கள்.

இப்படிப்பட்ட பெண்களிலே தலைமையுடைய பெண்கள் பஞ்ச கன்னிகை யென்று பெரியோர்களால் குறிப்பிக்கப்பட்டிருக்கிறது.

அப்பஞ்ச கன்னிகைகளிலே தலைமையானவர்கள் சீதையும், மண்டோதரியுமாம். மற்றவர் அகலிகை, திரௌபதை, தாரை யென்பவர்கள். பின் மூவர்களுக்குச் சிற்சில தோஷங் கூறப்படுகின்றது. அவைகளை யெடுத்துப் பேசுவாம்.

அகலிகை கௌதமருடைய பத்தினியா யிருந்தும் தேவேந்திரன் தன்னைக் காதலுற்றுத் தழுவிய காலத்தும் தேவேந்திரனென்று தெரிந்தும், சம்மதித்திருந்தனள். தாரை யென்பாள் வியாழ பகவானுடைய பத்தினியா யிருந்தும் சந்திரனிடத்துக் காதல்கொண்டு தவறி நடக்க நேர்ந்தது. திரௌ

பதி எவர்களாலும் புகழுங் கற்பினையுடையளா யிருப்பினும், ஐவர்களையும் நாயகராகக் கொண்டாளென்னும் வதந்தி யுண்டா யிருப்பினும், பழம் பொருந்து சருக்கத்தில் தனக்குக் கர்ணன் மீது கருத்துப் பொருந்தி யிருக்கின்றதென்றும் பகர்ந்தனள். ஆகையால் மேற்கூறிய பஞ்ச கன்னிகைகளில் சீதையையும் மண்டோதரியையுமே சிறப்பாகக் கொள்ளவேண்டியிருக்கின்றது. இத்தகைச் சிறப்பினர்களா யுள்ள கற்புடைய பெண்களின் இலக்கணத்தைப் புகழ வந்த ஔவையார்,

> "தண்ணீர் நிலநலத்தால் தக்கோர்குணங் கொடையால்
> கண்ணீர்மை மாறாக் கருணையால் பெண்ணீர்மை
> கற்பழியா வாற்றால் கடல்சூழ்ந்த வையகத்தில்
> அற்புதமா மென்றே யறி"

என்று கூறியவாற்றாலுணர்க.

## அறிவைப் பரீக்ஷிக்கும் சொற்கள்.

(1) போய் வருபவை இரண்டு.

> துன்றும் சகல கேவலமும் தூயநனவு கனவினைப் போல்
> என்றும் போதல் வருதல்செயும் இரவும் பகலுமென்று நனி
> மன்றுள் நடஞ்செய் பெருமானூர் மாற்றம் புகலு மாதலினால்
> வென்ற புலனோர்க்கிவை தோன்றா வீடுமெளிதில் வந்திடுமே.

சகல கேவலமும் நனவு கனவுகளும் போல இரவும் பகலும் என்றும் போக்குவரத்தும் ஆம். ஆனால் ஐம்புலன்களை வென்றார்களுக்கிவை யெல்லாமின்றாம்.

(2) போனால் வாராதவை இரண்டு-இளமைப் பருவமும் வயோதிகப் பருவமும்.

> பனிபடு சோலைப் பயன்மர மெல்லாம்
> கனியுதிர்ந்து வீழ்ந்தற்றிளமை—நனிபெரிதும்
> வேற்கண்ணை னென்றிவளை வெஃகன்மின் மற்றிவளும்
> கோற்கண்ணளாகுங் குனிந்து

என்று இளமைப் பருவமும் வயோதிகமும் போனால் வாராதென்று கூறப்படுகிறது.

(3) எப்பொழுதும் இருப்பவை இரண்டு—சூரிய சந்திரர்கள்.

ஒரு காலத்தில் பார்வதி பரமேஸ்வரனை தேவர் மனிதர் முதலாகிய எல்லாப் பிறப்பினர்களும் உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் எப்படி அறிகின்றார்கள் என்று கேட்டதற்குச் சூரிய சந்திரர்களாகிய நமது கண்களினால் என்றார். உடனே விளையாட்டாகச் சிவபெருமான் இரண்டு கண்களையும் மூட உலக முற்றும் இருண்டது. அவ்வமயம் நெற்றிக் கண்ணால் ஒளி தந்தார்.

இனி அதிகாரிகளாகிய சுருமி, முமூக்ஷு, அப்பியாசி, அனுபவி, ஆருடன் என்பவர்களில் மேற்சொல்லிய முமூக்ஷு அப்பியாசி அனுபவி இம்மூவர்களுக்கும் பிறப்பு உண்டென்றும், அனுபவி ஆருடன் இவர்களுக்குப் பிறப்பு இல்லை யென்று கொள்ளலுமாம்.




## கிருஷ்ணாவின் அல்லது துப்பறியும் சீடன்.

(445-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

### 14-வது அத்தியாயம்

பிச்சன் மூக்கில் மருந்தைக் காட்டியபோது, ஆனந்தலிங் மிக்க ஜாக்கிரதையாய் சுவாசத்தை விடாமல் அடக்கிக் கொண்டிருந்தான். ஆகையால் அவன் அம்மருந்தை மூகராமலே தப்பித்துக் கொண்டான். ஆகையால் நடந்த சங்கதிகள் யாவும் அவனுக்குத் தெரிந்தது.

அவர்கள் சென்றதே சற்றுநேரத்திற்குள், விஷப்புகை அவன் மூக்கில் ஏறத்தொடங்கியது. சற்று நேரத்திற்குள் அவன் மூச்சுத்திணறியதால் "ஓ கடவுளே! தந்தையே!" என்று கூவினான். மறு நிமிடம் ஸ்மரணை நீங்கி விட்டது.

ஆனந்தலிங் மட்டும் இன்னும் ஒரு நிமிடம் ஸ்மரணையோடிருந்தால், பின்னால் கூறப்படும் சம்பவங்களைச் சந்தோஷத்தோடு கேட்டிருப்பான்.

"அந்தோ! அந்தோ! அறை பூட்டப்பட்டிருக்கிறதே" என்ற துயரமான சத்தம் உண்டாயிற்று. மறுவினாடி பலமான ஏதோ ஒன்றால் கதவு இடிக்கப்படும் சத்தம் உண்டாயிற்று.

பிறகு "சீக்கிரம்! சீக்கிரம்! தைரியமுடைய பெண்ணே-சுத்த வீரனாகிய ஒருவன் சாகிறான் சீக்கிரம்! சீக்கிரம்!" என்ற சத்தம் கிளம்பியது.

மறுநிமிடம் கதவு திறக்கப்பட்டதும் "ஆ! புகை. சீக்கிரம் சீக்கிரம். அடைப்புகளை யெடுத்து விட்டுச் சாளரங்களைத் திற சீக்கிரம்! முன்னே உன் முகத்தைச் சாளரத்திற்கு வெளியில் நீட்டிச் சுத்த ஆகாயத்தைச் சற்று சுவாசி! பேஷ் நல்ல பெண்! கட்டுகளைச் சீக்கிரம் அறு. ஹா! இவனை மட்டும் சட்டென்று தூக்கிப்போய் சாளரத்தின் வெளியில் காட்டி சுத்தக் காற்றை உட்கொள்ளச் செய்தால்..." என்றான்.

உடனே அக்கன்னிகை அவ்வாறே அவன் மஞ்சத்தைச் சாளர ஓரத்தி விழுத்து, அவனைத் தூக்கி மார்மேல் சாய்த்துக்கொண்டு சாளரத்திற்கு வெளியில் அவன் முகத்தைக் காட்டினாள்.

ஆனந்தலிங் மெதுவாய் ஸ்மரணை வந்து திணறலோடு மூச்சு விட்டுக் கொண்டு கண்களைத் திறந்துகொண்டு மெதுவாய்ப் பார்த்தான். முதலில் இவள் யாரென்று விளங்கவில்லை. அக்கன்னிகை "இப்போது கொஞ்சம் சுகமடைந்தாயா?" என்றாள்.

ஆனந்தலிங் கஷ்டத்தோடு "ஆம் ஆம் கொஞ்ச...சுகமே. என்ஜேபி... விலங்கின் சாவி..." என்றான்.

அக் கன்னிகை அக்குறிப்பறிந்து, எழுந்து அவன் சட்டையைச் சோதித்து உள் ஜேபியிலிருந்த சாவியை யெடுத்து விலங்கைக் கழற்றி விட்டாள்.

ஆனந்தஸிங் மெதுவாய்ச் சமாளித்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான். அக் கன்னிகை யவனைத் தடைசெய்யாமல் பக்கத்திலிருந்த சாளரத்தருகில் சென்று நின்று கொண்டு "இவன் நாம் செய்த உதவிக்கு நன்றி பாராட்டி நமது வேண்டுகோளுக்கு ஒப்புக்கொள்வானா ?" என்று சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

ஆனந்தஸிங் தன் உயிர் இக் கன்னிகையால் மீந்தது என்று உணர்ந்து, "கன்னிகையே! நீ என் உயிரைக் காப்பாற்றினாய். தயவுசெய்து நீ யாரென்பதை யெனக்குத் தெரிவிக்கவேண்டும்" என்றான்.

அதற்கு அக் கன்னிகை "அதைப்பற்றி இப்போது அவசியமல்ல. நீ பூரண சுகமடைந்ததா யிருந்தால் உனக்கு ஒரு சங்கதி கூற விரும்புகிறேன்." என்றாள்.

ஆனந்தஸிங்:—"பக்கத்து அறையில் இன்னும் புகையிருக்கிறது. அந்த அறையைத்திறக்கிறாயா ?" என்றான்.

கன்னிகை "ஆஹா திறக்கிறேன்" என்று எழுந்து சென்றாள்.

ஆனந்தஸிங் கூடவே சென்று விளக்கை ஏற்றுகிறேன் என்று ஏற்றியதும் அவள் முகத்தைக் கண்டு "ஓ தெய்வமே! கற்பகம்! நீயா ?" என்றான்.

அக் கன்னிகை கள்ளர் கூட்டம் கூடும் அவ்வீட்டின் குத்தகை தாரியாகிய வேதம்மாளுடைய மகள். இவள்தான் நாடகத்திலிருப்பவள்.

ஆனந்தஸிங் கூறியதைக் கேட்டதே யவள் வியப்படைந்து,

"ஹா! என்னை யறிவாயா! அப்படியானால் நான் கூறப்போவது இன்னதென்று தெரிந்துகொள்வாய்" என்றாள்.

ஆனந்த:—"உண்மையில் எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை" என்று கூறினான்.

ஆனால் அவன் மனதில் பலவிதமான யோசனைகள் உதித்தன.

கற்பகம்:—நான் உன் உயிரைக் காப்பாற்றியதாய் நீ நம்புகிறாயா ?

ஆனந்த:—சந்தேகமின்றி.

கற்பகத்திற்குப் பிறகு என்ன கூறுவதென்று கலவரமாய் விட்டது. கடைசியில்,

"நான் இச்சங்கதியைப்பற்றி கேள்விப்பட்டேன். உடனே உம்மைக் காப்பாற்ற வேண்டு மென்ற ஒரே யெண்ணம் என் மனதில் உதித்தது. அப்படிச் செய்யாவிட்டால் இக் கொலைக்கு நானும் உடந்தையாயிருப்பது போலாகுமென்று என் மனதிற்குப் படுகிறது" என்றாள்.

ஆனந்தஸிங் "நான் உனக்கு என் உயிருள்ள வரையில் கடமைப்பட்டவனாயிருக்கிறேன்" என்றான்.

கற்பகம்:—"நான் கூறுவதாவது, உன்னைக் காப்பாற்றவேண்டுமென்றே ஒரு எண்ணத்தோடேயே வந்தேன். இப்போது நீ பூரணமாய் சுகத்தோடு காப்பாற்றப்பட்ட பின்—நான் ஒரு விஷயத்தை நினைத்துக் கொண்டேன்." என்றாள்.



# வர்த்தமானப் பகுதி

## கருப்பரை வெள்ளையராக்க முயற்சி:—

ஜப்பான் தேசத்தைச் சேர்ந்த டாக்டர். கோகுசி என்பவர் ஜனங்களின் நிறத்தை மாற்றிவிடக்கூடிய உபாயத்தைக் கண்டு பிடித்து விட்டதாக அறிவிக்கிறார். ஒருவகை மின்சார சக்தியை மனிதரின் இரத்தத்துடன் கலக்கச் செய்வதாலும், மாம்ச கிரந்தியை அடக்குவதாலும் மனிதர்களுடைய நிறத்தை மாற்றுவதைப் போலவே அவர்களுடைய குணவிசயங்களையும் மாற்றிவிடலாமென்று கூறுகிறார். ஒரு நீக்ரோவையோ அல்லது இந்தியனையோ வெள்ளையரைப்போல நிறத்திலும் குணத்திலும் செய்து விடலாமென்பது அவருடைய கருத்து. மேலும் அவர், அத்தகைய மின்சார சக்தியைப் புகுத்துவதால் அழகற்ற குழந்தைகளை அழகுள்ளவர்களாகவும், செய்யலாமென்றும், பதினைந்து வருஷ அனுபவத்துக்குப் பிறகேதான் இதை எடுத்துக்கூறமுடிந்ததென்றும் அறிவிக்கிறார்.

## பொம்மைக் குழந்தையின் ஜனனம்:—

சாதாரணமாகக் குழந்தைகள் பிறந்ததும் சராசரி 128-அவுன்ஸ் கனமிருப்பது வழக்கம். ஆனால் புடாபெஸ்ட் என்னுமிடத்தில் ஒரு யூதர் வீட்டில் சமீபத்தில் ஒரு பெண் குழந்தை பிறந்தது. பிறக்கும்போது அது 21-அவுன்ஸ் கனமுள்ளதாக இருந்தது கண்டு அனைவரும் ஆச்சரியப்பட்டனர். மூன்று வாரமான பிறகு அதன் உயரம் $12\frac{1}{2}$ அங்குலம் தான். அக்குழந்தை இறந்து விடுமென்று பலர் கருதிய போதிலும் அது இன்னும் பிழைத்திருக்கிறது. இயற்கையின் ஆச்சரியத்தைக் கண்டு பிடிப்பது அசாத்தியமாயிருக்கிறது.

## பாதசாரிகள் சங்கம்:—

லண்டன், பிலீட்தெரு, 134-ஆம் எண்ணுள்ள கட்டடத்தில் பாதசாரிகள், சங்கம் ஒன்று நிறுவப்பட்டிருக்கிறது. சாதாரணமாக யுத்தங்களில் ஜனங்கள் இறப்பதை விட வருஷ வாரியில் மோட்டார் விபத்துக்களால் ஜனங்கள் அதிகம் சாவதால் அதைத் தடைப்படுத்தும் பொருட்டே இச்சங்கம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. வருஷவாரி லண்டனில் மட்டும் ஏழாயிரம் ஜனங்கள் இத்தகைய ஆபத்துக்களால் இறக்கிறார்களாம்.

## ஆகாய விமானத்தில் பாம்பு:—

ஒருவர் ரங்கூனிலிருந்து டவாய்க்கு ஆகாய விமானத்தில் பறந்து சென்றுகொண்டிருக்கையில், தன் விமானத்தில், தன் டிரைவர் உட்காரும் ஆசனத்துக்குக் கீழிருந்து ஒரு பாம்பு ஊர்ந்து வந்ததைக் கண்டார். அது திடீரென்று தன் பக்கமாகத் திரும்பி வேகமாக வருவதைக் கண்டதும் அவர் தைரியமாகத் தன் தடியால் அடித்துக் கொன்றாராம். தன் விமானத்தை ரங்கூன் ரேஸ் கோர்சில் நிறுத்தி யிருந்தபோது அப்பாம்பு விமானத்தில் புகுந்திருக்க வேண்டுமென்று அபிப்பிராயப்படுகிறார்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சுக்கில வருஷம் பங்குனிமீ—கலியுகாதி 5031, சாலிவாகனம் 1852,
பசலி 1339—கொல்லமாண்டு 1105—ஹிஜரி 1348,
இங்கிலீஷ் 1930ஸ்ரீ மார்ச்சுமீ—ஏப்ரல்மீ

| பங்குனி | மார்ச்சுமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வெ | ○45-18 | பூர28-38 | சித்60 | மீனரவி நா-0-45, ○, ஷடசீதி புண்யகாலம், காமதகனம் [களில் |
| 2 | 15 | சனி | பிர38-48 | உத்23-35 | மர60 | பங்குனிஉத்திரம்சிலவிடங் |
| 3 | 16 | ஞா | துதி33-25 | அஸ்19-40 | அ19-40சி | சாதுர்மாஸ்ய அவிதியா |
| 4 | 17 | திங் | திரி29-33 | சித்17-18 | பி17-18அ | சுபகாரியங்கள் விலக்க |
| 5 | 18 | செவ் | சது27-40 | சுவா16-45 | சி16-45ம | அங்காரக சதுர்த்தி |
| 6 | 19 | புத | பஞ்27-45 | விசா18-3 | சித்60 | |
| 7 | 20 | வியா | சஷ்29-58 | அனு21-18 | சி21-18பி | |
| 8 | 21 | வெ | சப்33-45 | கே26-18 | ம26-18அ | |
| 9 | 22 | சனி | அஷ்38-53 | மூல32-30 | சித்60 | |
| 10 | 23 | ஞா | நவ44-48 | பூரா39-45 | சி39-45அ | |
| 11 | 24 | திங் | தச51-3 | உத்47-13 | ம47-13அ | |
| 12 | 25 | செவ் | ஏகா57-3 | திரு54-25 | சித்60 | |
| 13 | 26 | புத | துவா60 | அவி60 | பிர60 | |
| 14 | 27 | வியா | துவா2-30 | அவி1-13 | சி1-13மா | |
| 15 | 28 | வெ | திர6-58 | சத7-5 | சித்60 | |
| 16 | 29 | சனி | ச●10-25 | பூர11-50 | மர11-50சி | சர்வத்திர அமாவாசை |
| 17 | 30 | ஞாய | அமா12-45 | உத்15-33 | அமி60 | கிருஷிபாரம்பம் செய்ய |
| 18 | 31 | திங் | பிர13-48 | ரே18-8 | சித்60 | யுகாதிபண்டிகை. |
| 19 | 1 | செவ் | துதி13-45 | அஸ்19-43 | சித்60 | கரிநாள் [விரதம் |
| 20 | 2 | புதன் | திரி12-45 | ப✻20-15 | சி20-15அ | கிருத்திகை, மாச சதுர்த்தி |
| 21 | 3 | வியா | சது10-48 | கிரு19-48 | மர60 | கிருத்திகை (பிழையான கணிதப்படி), லக்ஷ்மி ஸ்ரீபஞ் |
| 22 | 4 | வெ | பஞ்7-53 | ரோ18-5 | மர18-5சி | சஷ்டி, அவமாகம் [சமி |
| 23 | 5 | சனி | சஷ்4-3 சப்59-28 | மிரு16-20 | சித்60 | அவமாகம், கங்கோற்பத்தி வியாதிபஸ்னர் குளிக்க |
| 24 | 6 | ஞா | அஷ்54-15 | திரு13-23 | சித்60 | பவான் உற்பத்தி [தி |
| 25 | 7 | திங் | நவ48-25 | புன9-50 | அ9-50சித் | ஸ்ரீராமநவமி, ஸ்ரீராமஜயந் |
| 26 | 8 | செவ் | தச42-15 | பூச5-50 | சித்60 | தர்மராஜ தசமி |
| 27 | 9 | புதன் | ஏகா35-48 | ஆயி1-23 மக56-45 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி, அவமாகம், தோலோட்சவ |
| 28 | 10 | வியா | து29-23 | பூர52-23 | சி52-23ம | வாமன துவாதசி |
| 29 | 11 | வெ | திர23-30 | உத்48-25 | சி48-25அ | அவமாகம்,பங்குனிஉத்திரம் |
| 30 | 12 | சனி | ச○17-55 | அஸ்45-10 | மர60 | பௌர்ணமி |

1930ஸ்ரீ ஏப்ரல்மீ

| | | | |
|---|---|---|---|
| சூரி சுக் | ராகு | குரு | |
| செவ் புத | 10-மீன-புத 18-மே-சுக் 25-மே-புதன் | | |
| சனி | | கேது | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.